# ஸ்ரீராமாநுஜன் ~~110~~. 109

ஆசிரியர் : காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

வருஷ சந்தா ரூ. 5.



ஹேவிளம்பி௵ மாசி௴ 1958 பிப்ரவரி௴

ஸ்ரீ:


# ஸ்ரீராமாநுஜன் 109.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 10 | ஹேவிளம்பி௵ தைமீ 1958௵ ஜனவரிமீ | மலர் 1 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—பாசுரம் 1.

உயர்வே பரன்படியை உள்ளதெல்லாம் தான்கண்டு *
உயர்வேத நேர்கொண்டு உரைத்து * —மயர்வேதும்
வாராமல் மானிடரை வாழ்விக்கும் மாறன்சொல் *
வேராகவே விளையும் வீடு.

## பத்திரிகையாசிரியரின் விண்ணப்பம்.

---

நமது ஸ்ரீராமாநுஜன் ஒன்பது பிராயங்கள் கடந்து பத்தாவது பிராயத்தில் இப்போது அடிவைக்க ப்ராப்தமாகின்றது. இதுகாறும் இதனை அன்புடன் ஆதரித்து வந்த அன்பர்கள் இனியும் குறையற ஆதரிப்பர்களென்று விச்வஸித்திருக்கின்றோம்; பிரார்த்திப்பதும் செய்கின்றோம்.

இதில் கம்பரின்பக்கவித்திரட்டும் ஸ்ரீ தேசிக ஸ்தோத்ர வியாக்கியானமும் வெளியிடத் தொடங்கிச் சில பகுதிகள் வெளியிட்டிருக்கிறோம். அவற்றின் மேற்பகுதிகளை ஆவலோடு எதிர்பார்த்திருக்குமவர்கள் ஏமாற்றமடையார்கள். அந்தந்த ஸமயங்களில் ப்ராப்தமாகின்ற வெளியீடுகளையும் உபேக்ஷிக்க முடியாமலிருப்பதால் இடையிடையில் வெவ்வேறு விஷயங்கள் இதில் இடம் பெறுகின்றன. அவற்றையும் அன்பர்கள் ஆதரித்துக் கடாக்ஷித்து வருகின்றார்களென்று மகிழ்கிறோம்.

இதில் ஸஞ்சிகைதோறும் இராமாநுச நூற்றந்தாதியின் பாசுரத்தை அடைவே வெளியிட்டு வந்தோம். அது சென்ற ஸஞ்சிகையில் முடிவு பெற்றதனால் இப்போது அதன் ஸ்தானத்தில் அதனில் மிக்க பெருமை வாய்ந்த திருவாய்மொழி நூற்றந்தாதியை எடுத்துக் கொள்ளுகிறோம். ஒவ்வொரு ஸஞ்சிகையிலும் ஒவ்வொரு பாசுரமும் விரிவுரையோடு வெளியிடப்பட்டுவரும். இதனால் திருவாய்மொழியில் ஒவ்வொரு பதிகத்தினுடையவும் ஸாராம்ஸம் தெரிந்துகொள்ளலாகும்.

# * உயர்வே பரன்படியை * என்கிற முதற் பாசுரத்தின் விளக்கம்.

## முன்னுரை.

---

ஆழ்வார்களுள் நம்மாழ்வார் மிக்க சிறப்புப் பெற்றதுபோல, திவ்யப் பிரபந்
களுள் நம்மாழ்வாரருளிச் செயல்களே அளவிறந்த சிறப்புப் பெற்றவை. அவாருளி
நான்கு திவ்யப் பிரபந்தங்களுள், திருவாய்மொழி யென்னும் சரமப் பிரபந்தமே ஒப்பு
வற்ற பெருமை வாய்ந்தது. பூருவாசாரியர்கள் பலரும் இதற்கே அதிகமாக வியா
யானங்களைச் செய்து போந்தார்கள். அந்த வியாக்கியானங்களைக் கொண்டு திருவா
மொழியை யநுபவிப்பதென்பது மானிடப் பிறப்பில் சிறந்ததொரு பாக்கியமாகு
உண்மையில், இப்பாக்கியம் ஒரு மூலையில் சில ஸுக்ருதிகளுக்கு விளைவதேயன்றி அ
வர்க்கு மெளிதன்று. ஏனைய சாஸ்திரங்களுக்கும் நூல்களுக்கும் அதிகாரிகள் எங்
முள்ளார்கள். இதற்கு அதிகாரிகள் தேடிப்பிடிக்க வேண்டியவர்களேயாவர். இதற்
பகவத் விஷயம் என்று உலகமெங்கும் பெயர் வழங்கி வருகின்றது. இதற்கு இப்பெயரிட்டவ
யாரோ அறியோம். பகவத் விஷயமென்பதற்கு பகவானைப் பற்றியதென்று பொருள்
ஸ்ரீ ராமாயணம், ஸ்ரீ பாகவதம், மஹாபாரதம், ஹரிவம்சம், விஷ்ணு புராணம் முதலிய
பலவும் பகவானைப் பற்றியவையே; ஆயினும், அவற்றிற்கு பகவத் விஷயமென்கிற வழக்கு
எங்கும் நிகழவில்லை. திருவாய்மொழி யநுபவத்தையே பகவத் விஷயாநுபவமென்றும்,
பகவத் விஷய காலக்ஷேபமென்றும் வழங்கி வருவது கொண்டே இதன் ஒப்புயர்வற்ற
பெருமையை யுணரலாம். ஆங்காங்கு விஷ்ணுவாலயங்களில், பகவானுடைய திருவீதிப்
புறப்பாடுகளில், ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியார் திவ்யப் பிரபந்தங்களை ஓதி வருகிறார்களென்
பதை அனைவருமறிவர். ஆனால், மற்றைத் திவ்யப் பிரபந்தங்களை வீதிகளில் ஓதுவர்களே
யன்றித் திருவாய்மொழியை ஓதார்கள். இதை வீதிகளில் நடந்துகொண்டு சொல்லலாகா
தென்றும், பெருமாள் ஆஸ்தானங்கொண்டு அமர்ந்திருக்கும் போதே ஸ்வாமிகள் வீற்
றிருந்து ஸேவிக்கவேணுமென்றும் ஸ்ரீமந்நாத முனிகளால் இடப்பட்ட கட்டளை. அந்நாள்
தொடங்கி இந்நாள்வரை, இது எங்கும் ஏக ரீதியாகப் பரிபாலிக்கப்பட்டு வருகின்றது.
இதனாலும் இதன் சிறப்பு அறியப் பெறலாகும்.

தமிழ் மொழியில் அந்வயமற்ற பிற நாட்டினரும் இதன் பொருட் சுவையைக்
கேட்டுப் பரவசர்களாகி, மூலத்தையாவது கற்றுவைப்போமென்று துணிந்து "எங்ஙனே
சொல்லிலுமின்பம் பயக்குமே" என்று திருவாய்மொழியிலேயே ஆழ்வாரருளிச் செய்திருக்
கிறபடி, ஒருவாறு சொல்லி இன்பம் நுகர்ந்து வருகின்றன ரென்பதை எண்டிசையிலும்
கண்டு வருகிறோம். திருவாய்மொழிப் பாசுரங்களைக் கண்டபாடஞ் செய்து, வியாக்கி
யானங்களைக் கொண்டு பொருளுணர்ந்து இன்பம் நுகர்வதென்பது அரிய பெரிய காரிய
மாகும். அவ்வளவு பரிச்ரமத்தைச் சகிக்க மாட்டாதவர்களும், பகவத் விஷய ஸாராம்ருத
பானம் செய்து இன்புறவேணுமென்கிற பேரவாவினால், இஃது எழுதப்புகுகின்றேன்.
கதைகளையும், நாவல்களையும் ருசியுடன் வாசிப்பது போலவே இதனையும் வாசித்து,
வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கைக் கண்டு களிக்கப் பெறுவார்களென்பது
எமது நம்பிக்கை.

முந்துற முன்னம் நம்மாழ்வாரது பெருமையைப் பற்றிச் சிறிது பேசுவோம். "பூழி
யர்கோன் தென்னாடு முத்துடைத்து" என்ற முதியோர் மொழியின்படி, முத்து வளத்தை மிகு

யாகவுடையதும், செந்தமிழ் நாடென்று சிறப்புற்றதும், "ஈரொன்பதாம்பாண்டி" என்கிற படியே, பதினெட்டுத் திருப்பதிகளையுடையதுமான பாண்டிய நாட்டிலே, கங்கை யமுனை முதலிய புண்ணிய நதிகள் பலவற்றிலும் விஞ்சிய வீறுபெற்ற தாமிரபர்ணி யென்னும் பொருநையாற்றின் கரையிலே, ஆழ்வார் திருநகரியென வழங்கப்பெற்றுவருந் திருக்குருகூரில், வம்சபரம்பரையாகத் திருமாலடிக்கே தொண்டுபூண்டொழுகுஞ் சிறந்த குலத்திலே, காரியார்க்கும் உடைய நங்கைக்கும் திருக்குமாரராக, வைகாசி விசாகத்தில் திருவவதரித்தவர் நம்மாழ்வார். இவர்க்கு, சடகோபன், பராங்குசன், வகுளாபரணன், மகிழ்மாலை மார்பினன், காரிமாறன் முதலான பல திருநாமங்கள் வழங்கும். 'ப்ரபந்நஜந கூடஸ்தர்' என்பது சிறப்புத் திருநாமம். இவரது திருவவதாரத்தைப் பற்றிப் பலர் பலவாறு சங்கிப்பர்கள். ஆசார்ய ஹ்ருதயம் என்னும் சிறந்த நூலிலுள்ளவொரு சூர்ணிகையை இங்கெடுத்துக் காட்டுவோம்:—

"அத்ரி ஜமதக்நி பங்க்திரத வஸுநந்தஸூநுவானவனுடைய யுகவர்ணக்ரமாவதாரமோ? வ்யாஸாதிவத் ஆவேசமோ? மூதுவர் கரை கண்டோர் சீரியரிலே ஒருவரோ? முன்னம் நோற்ற அனந்தன்மேற் புண்ணியங்கள் பலித்தவரோ? என்று சங்கிப்பர்கள்"

என்பதாமது; இதன் சுருக்கமான கருத்தாவது-க்ருதயுகத்தில், அத்ரியும் ஜமதக்நியுமாகிற ப்ராஹ்மணோத்தமர்களுக்குப் பிள்ளையாய்க் கொண்டு தத்தாத்ரேயனும் பரசுராமனுமாய், த்ரேதாயுகத்திலே க்ஷத்ரியனான தசரத சக்கரவர்த்திக்குப் பிள்ளையாய், த்வாபர யுகத்தில், ராஜ்ய ப்ராப்தியில்லாத யது குலத்திற் பிறந்து, க்ஷத்ரியரில் தண்ணியரும், வைச்ய ப்ராயருமான வஸுதேவர்க்கும், மோக்ஷணத்தாலே ஸாக்ஷாத் வைச்யரான ஸ்ரீநந்தகோபர்க்கும் பிள்ளையாய், ஆகவிப்படி க்ருதம் முதலிய யுகங்களினடைவே ப்ராஹ்மணாதி வர்ணங்களில் முறையே அவதரித்துவந்த ஸர்வேச்வரன், நான்காவதான கலியுகத்திலே, நான்காவது வருணத்திலே ஆழ்வாராக வந்து அவதரித்தபடியோ! என்று சிலர் எண்ணினர்கள். மற்றுஞ் சிலரோவெனில், வேதங்களைப் பகுத்தல் முதலிய காரியங்களுக்காக வியாஸர் முதலிய மஹர்ஷிகள் பக்கலில் பகவான் ஆவேசித்ததுபோலே, தமிழ் வேதத்தை வெளியிடுதற்காக இவர் பக்கலில் ஆவேசித்தபடியோ! என்று எண்ணினர்கள். இன்னமுஞ் சிலர், இவ்விபூதியைத் திருத்துகைக்காக எம்பெருமானது கட்டளையினால் நித்யஸூரிகளிலொருவர் வந்தவதரித்தபடியோ! என்று கருதினர்கள். வேறு சிலர், முக்தரிலே ஒருவர் வந்தவதரித்தபடியோ? அன்றியே, ஸ்வேதத்வீபவாஸிகளிலொருவர் வந்தவதரித்தபடியோ? அல்லது கீழ்ச்சொன்னவர்களிலொருவருமன்றியே, ஸம்ஸாரிகள் தம்மிலே பல்லாயிரம் பிறவிகளிலீட்டிய நல்வினையின் பயனாக இங்ஙனம் திருந்தினரொருவரோ! என்று சங்கித்தார்கள். அன்றியே, நிர்ஹேதுக கடாக்ஷ விசேஷத்தாலே, நித்யஸம்ஸாரியை நித்யஸூரியோடொக்கச் செய்யவல்ல எம்பெருமானுகிற ஒரு புண்யவிசேஷம் முழுநேர்க்காகப் பலித்து இங்ஙனம் திருந்தப் பிறந்தாரொருவரோ! என்றும் சங்கித்தார்கள்—என்றபடி. ஒருவாறு நிர்ணயித்துக் கூறமுடியாமல் இங்ஙனம் பலவாறு சங்கிக்கும்படியான பெருமையாயிற்று இவரது.

"சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமம் துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கும், உளவோ பெருமா னுனக்கு."

என்பது முதலான பல பாசுரங்கட்கிணங்க, ஆழ்வாரை எம்பெருமான்றனது அவதாரமாகக் கொள்ளுதலும் இவரது மிக்க பெருமைக்குப் பொருந்தியதே யாகும். பகவானுக்குப் பல

வாற்றாலும் அடிமை செய்வதையே உறுதொழிலாகக் கொண்ட திருவனந்தாழ்வான் [ஆதி சேஷன்], பகவானது அவதாரங்கள் தோறும் உடன்வந்து அடிமை செய்வதுபோல, நம்மாழ்வாராகிற இப்பெருமானுடைய அவதாரத்திலும், அவன் ஒரு பெரிய புளியமரமாக முன்னமேவந்து தோன்றியிருந்து, ஆழ்வாரான இத்தெய்வக் குழவிமீது வெயில் மழை முதலியன படாதிருக்குமாறு காத்து வந்தனன்.

இத்தெய்வ சிசு, பிறந்த பொழுதே தொடங்கி, அழுதல். பாலுண்ணுதல் முதலிய உலக வியல்பு ஒன்றுமின்றியும், வாட்டமில்லாது பரிபூர்த்தியோடிருக்குமதிசயத்தைக் கண்டு, தாய் தந்தையர் எம்பெருமான் பக்கலிலே பாரத்தை வைத்திட்டுத் தாம் சிறிதும் கவலையுறாமல் விலகி நின்றனர். இத்தெய்வக் குழவி திருக்குருகூர்ப் பெருமானுனை பொலிந்து நின்ற பிரானது திருமுன்பே திருப்புளி மரத்தடியிலே வளர்ந்து வாரா நின்றது. கருக்குழியிலிருக்கும்பொழுது ஞானமுடையனவாயிருக்கிற குழந்தைகளை, பிறந்தவுடனே அஜ்ஞானத்துக்கு உள்ளாக்கி, அழுதல், அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந் தன்மையதான சடமென்னும் வாயு இவரையும் தொடுதற்கு வர, அப்பொழுது இவர் அதனை உங்காரத்தால் ஒறுத்து ஓட்டி யொழித்ததனால், இவர்க்குச் சடகோபர் என்று திருநாமமாயிற்று. உலக நடைக்கு மாறாயிருந்ததனால்: மாறனென்றுந் திருநாமமாயிற்று. "நஞ்சடகோபனைப் பாடினையோவென நம்பெருமாள் விஞ்சிய வாதரத்தாற் கேட்ப" என்று பின்புள்ளாருங் கொண்டாடும்படி, இவர் திருவரங்கத்தரவணையில் துயிலும் நம்பெருமாளால் 'நம் ஆழ்வார்' என்று அபிமானித்து, விசேஷ கடாக்ஷம் செய்யப்பெற்று, மற்றை யாழ்வார்களனைவரினும் உயர்வு பெற்றதனால் 'நம்மாழ்வார்' என்றே வழங்கப்பட்டு வருகின்றார்.

இவ்வாழ்வார், பதினாறு பிராயமளவும் கண்விழியாமல் மௌனத்தோடிருக்க, அப்பொழுது பரமபத நாதனது நியமனத்தினால் சேனை முதலியாரென்கிற விஷ்வக்ஸேநர் ஏகாந்தமாக எழுந்தருளி, இவர்க்குத் திருவாழி திருச்சங்கிலச்சினை செய்து, ஸகல மந்த்ரப் பொருள்களையும் உபதேசித்தருளினர். அதனைத் தமது முதற் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில், "பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப் புண்டரீகம், நம்மேலொருங்கே பிறழவைத்தாரிவ்வ காலம்" என்ற பாசுரத்தினால் ஒருவாறு ஸூசிப்பித்திருக்கின்றாரென்று ஸம்பிரதாயம் வல்ல பெரியார் கூறுவர்.

பதினாறு கலைகளும் நிறைந்த சந்திரன் போலப் பதினாறு பருவம் நிரம்பி, உறங்காப்புளி நிழலிலே பத்மாஸனங்கொண்டு வீற்றிருந்து, பர தத்துவத்தைத் தியானஞ் செய்து ஞான முத்திரை கைக்கொண்டிருக்கு மிவ்வாழ்வாருடைய திருமேனிச் சோதியானது, வடநாட்டுத் திருப்பதி யாத்திரை சென்றிருந்த மதுரகவி யாழ்வாரை நெடுந் தூரத்தினின்றுமிழுக்க, அவர் விரைந்து வந்து இவரை யணுகி, இவரது ஞான பக்தி விரக்திகளை நன்கறிந்து மகிழ்ந்து, இவர்க்கு அத்தாணிச் சேவகராக அமைந்தனர். அவரே ஆழ்வார்க்கு அந்தரங்கமெனும் நெஞ்சின் ஸ்தானத்திலே யிருந்தனர். ஆழ்வார் தமது மூன்றாவது பிரபந்தமாகிய பெரிய திருவந்தாதியில் "யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம்" என்றவிடத்து, "என்னெஞ்சு" என்ற சொல்லால், அந்த மதுர கவிகளை குறிப்பிடப் பெற்றாரென்பது ஸம்பிரதாயம். பாலும் சர்க்கரையும் கலந்தாற்போல் இவ்விருவரும் ஒன்று சேரவே பகவதநுபவம் மிகமிக முற்றிற்று. நூற்றெட்டுத் திருப்பதி யெம்பெருமான்களும் அங்கு எழுந்தருளி

ஆழ்வார்க்குக் காட்சி கொடுக்க, அவர்களைச் சேவித்து, அவர்களது திவ்ய குணங்களை யநுபவித்து, அவ்வநுபவத்தினாலுண்டான ப்ரீதி உள்ளடங்காமல் புறவெள்ளமிட்டுப் பெருகத் தொடங்கவே, அதுவே திவ்யப் பிரபந்தங்களாக உருக்கொண்டதாயிற்று.

வடமொழியில் ருக் வேதம், யஜுர் வேதம், அதர்வண வேதம், ஸாம வேதம் என நான்கு வேதங்களுண்டு; அவையே நம்மாழ்வாருடைய திருமுகத்தினின்று திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி யென நான்கு திவ்ய ப்ரபந்தங்களாக அடைவே தோன்றின. வேதங்களுட் சிறந்ததும், பகவானது ஸ்வரூபமாகவே யுள்ளதுமான ஸாம வேதத்தின் தத்துவப் பொருளைச் சாமப் பிரபந்தமான திருவாய்மொழியினால் வெளியிட்டருளினா ரென்பது, திருவாய்மொழித் தனியன்களுள் முதலதான "பக்தாம்ருதம் விச்வ ஜநாநுமோதநம்" என்கிற ச்லோகத்தில் "ஸஹஸ்ர சாகோபநிஷத் ஸமாகமம்" என்பதனால் வெளியாகும்.

நாம் கற்றுணரத் தோன்றிய சாஸ்த்ரங்கள் எவ்வளவு விபுலமாக இருந்தாலும், இவற்றினின்று ஐந்து பொருள்களே நாம் அறிய வேண்டியவை என்று மேலையார் முடிவு செய்தனர். அந்த ஐந்து பொருள்களாவன—பரப்ரம்ம ஸ்வரூபமும், ஜீவாத்மாவினது தன்மையும், பரமாத்மாவை அடையும் உபாயமும், அங்ஙனம் அடைதலின் பயனும், அடைதற்கு உள்ள பிரதிபந்தகமும்—என்பனவாம். இவையே ஸகல வேத சாஸ்திரங்களிலும் ஸாரமாகச் சொல்லப்பட்டவையாம். திருவாய் மொழியிலும் அவையே சில பாசுரங்களிற் சுருக்கமாகவும், பல பாசுரங்களில் விரிவாகவும் தெரிவிக்கப்படுகின்றனவென்பது,

"மிக்க இறைநிலையும் மெய்யா முயிர்நிலையும்,
தக்க நெறியும் தடையாகித்—தொக்கியலும்,
ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர்கோன்,
யாழினிசை வேதத் தியல்"

என்ற திருவாய்மொழித் தனியனாலும் விளக்கப்பட்டுள்ளது.

இவ்வாழ்வார் எம்பெருமானது திருவடிகளுக்கு மிகவும் அந்தரங்கராக இருந்ததனால், பெருமாளது பாதுகை 'ஸ்ரீ சடகோபன்' என்று இவரது திருநாமத்தையிட்டு வழங்கப்பட்டு வருகின்றது. இது சில க்ஷேத்திரங்களில் மாத்திர மன்றிக்கே, விஷ்ணுவாலயமென்று பேர் பெற்ற ஸகல ஸ்தலங்களிலும் ஏக ரீதியாகக் காண்கின்றமையாலும், நம்மாழ்வாருடைய விக்ரஹாராதனமில்லாத விஷ்ணு கோவில் காணக் கிடைக்காததலாலும். இவ்வாழ்வாருடைய பெருமை நீண்ட காலமாகவே உலகமெலாம் பரவியுள்ளதென்பது அறியற்பாலது.

நூறு பதிகங்கள் கொண்ட திருவாய்மொழி யாயிரத்தை யநுபவிப்பது பலவகையாக அமையும். ஒவ்வொரு சொல்லையுமெடுத்துக் கொண்டு அநுபவிக்கலாம்; ஒவ்வோரடியாக அநுபவிக்கலாம்; ஒவ்வொரு செய்யுளாக அநுபவிக்கலாம். ஆனால், அவ்வநுபவங்கள் நீண்ட காலம் இடையறாது செல்லவேண்டியவையாகும். நாம் மிக விரிவாக எழுதி வெளியிட்டுள்ள திவ்யார்த்த தீபிகை யுரையைக் கொண்டும், பேரின்பமே வடிவெடுத்த பூர்வாசார்ய வ்யாக்யானங்களைக் கொண்டும் அத்தகைய அநுபவங்களை நிகழ்த்தலாம். ஒவ்வொரு பதிகத்தினுடையவும் பிரமேயத்தை விளக்கும் முகத்தால், இப்போது நாம் செய்யப் புகுமநுபவம்

ரஸிகர்களுக்கு மிகவும் பயன்படுமென நினைக்கிறோம். ஆசார்ய சிகாமணியான மணவாள மாமுனிகள் அருளிய திவ்விய நூல்களிலே, திருவாய்மொழி நூற்றந்தாதி யென்பதொன்று. இதற்கு நிகரான நூல் இதுகாறும் இவ்வுலகின்கண் தோன்றிற்றில்லை. ஒவ்வொரு பதிகத்தினுடையவும் ஸாரமான பொருளே ஒவ்வொரு வெண்பாவினால் வெளியிட்டது அது. அதையே மூலமாகக் கொண்ட இக்கட்டுரை தொடர்ந்து வரும். —முன்னுரை முற்றிற்று.

திருவாய்மொழியின் முதற்பதிகம் "உயர்வற வுயர்நல முடையவன்" என்று தொடங்குவது; இஃது எம்பெருமானுடைய பரத்துவத்தை ரூதலிக்கத் தோன்றியது. 'பகவான் பராத்பரன்' என்பதை நாம் எது கொண்டு தெரிந்து கொள்வது? கட்கூடாகக்கண்டு தெரிந்து கொள்ளக்கூடிய விஷயமன்று; அநுமானத்தாலுமறிந்து கொள்வதொன்றன்று. கேவலம் சாஸ்த்ரங்களினாலேயே தெரிந்து கொள்ளத்தக்கதாகிறது. இந்திரியங்களுக்கு எட்டாத விஷயங்களில் சாஸ்திரமே பிரமாணமென்பது ஆஸ்திகர்களான வைதிகர்கள் அறுதியிட்ட விஷயம்; இதனையே ஆழ்வாரும் இப்பதிகத்தில் (7) *சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரன்—உளன்* என்பதனால் தெரிவித்தருளினர். அதாவது, தேசு பொலிந்த வேதங்களினால் அறியப்படுபவன் எம்பெருமான் என்றபடி. அங்ஙனம் வேதங்களினால் அறியக்கூடியதான பகவானது பரத்துவம் இப்பதிகத்தில் பல விசேஷங்களையிட்டு நிரூபிக்கப் பட்டிருக்கின்றது. "உயர்வற வுயர் நல முடையவன்" என்பது திருவாய்மொழியின் தொடக்கம். இதற்குமேல் உயர்த்தியுள்ளதென்று சொல்ல முடியாதபடி நிரவதிகமாக உயர்ந்த நற்குணங்களை யுடையவன்—என்பது இதன் பொருள். பகவானை நிர்க்குண ப்ரம்மம் என்று கொள்வர் ஒரு சாரார்; உபநிஷத்துக்களில் சிலவிடங்களில் பரப்ரம்மத்தை நிர்க்குணமென்றும், மற்றும் பலவிடங்களில் அனந்த கல்யாண குணநிதியாயிருப்பதாகவும் ஓதியிருக்கிறது. இரண்டையும் ஸமந்வயப்படுத்த வேண்டுமல்லவா? பரம ப்ராமாணிகமான வேதமானது, தவறாகவோ ஒன்றோடொன்று முரண்பட்டதாகவோ பேசமாட்டாதன்றே. முரண்படப் பேசியிருப்பதுபோல் தோன்றினால், விரோத லேசமுமில்லாதபடி ஸமரஸப் படுத்துவதே சாஸ்த்ரங்கள் வல்லார்களின் பணி. அப்படி ஸமரஸப் படுத்துமிடத்தில், நிர்க்குணமென்கிற வேதங்கள் தீயகுண மொன்றுமில்லாமையைச் சொன்னதாக முடியும். இதுவே பரம வைதிகர்களின் கொள்கை. இதை, ஆழ்வாருளிச் செயல் கொண்டறிந்தே ஸ்ரீ ராமாநுஜர் தமது ஸ்ரீ பாஷ்யம் முதலான நூல்களில் ஸகுண ப்ரம்ம ஸ்தாபனம் செய்து வைத்தார். பகவானை அடியோடு ஒப்புக்கொள்ளாதவர்களைக் காட்டிலும் அவனை யொப்புக் கொள்பவர்கள் மேம்பட்டவர்களெனினும், ஒப்புக்கொள்ளப்படுகிற பகவானுக்கு குணமில்லை விக்ரஹமில்லை விபூதியில்லை யென்பவர்கள் பகவானை ஒப்புக் கொள்ளாமலிருப்பதே நன்றென்று ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் வேதாந்த தேசிகர் எழுதியுள்ளார். குணமுடைமை, விபூதியுடைமை, விக்ரஹமுடைமை ஆகிய மூன்றையும் ஆழ்வார் முதற் பாட்டிலேயே திடப் படுத்துகிறார்.

பகவான் நற்குணங்களுக்கு இருப்பிடமானவன் என்கிற நூற்கொள்கையை முதலடியிலேயே திடப்படுத்துகிறார். இதனால், எம்பெருமான் தனது திருக்குணங்களைக்காட்டி ஆழ்வாரை வசப்படுத்திக் கொண்டனனென்பது விளங்கும். இங்கே, நம்பூருவர்கள் ஓர் ஆராய்ச்சி செய்வதுண்டு; எம்பெருமானிடத்தில் திருக்குணங்களைக் கண்டு ஈடுபடுவது சிறந்ததா? அஃது அடியாகவல்லாமல் இயற்கையாகவே ஈடுபடுவது சிறந்ததா? என்று. என்ன

...செய்தார்களென்னில், குணங்களைக்கண்டு ஈடுபடுவதிற் காட்டிலும், 'நமக்கு வாய்த்த ...ன்று கொண்டு இயற்கையாகவே ஈடுபடுவதுதான் சிறந்ததென்று. இங்ஙனே முடிவு ...தற்குக் காரணமென்னவெனில்; குணங்களைக் கண்டு ஈடுபடுவதென்று வைத்துக் ...ண்டால், குணமில்லையென்று ஒரு கால் மருண்டு நிற்கும்போது ஈடுபடாமல் நிற்க ...ண்டிவரும். ஒரு மனைவி தன் கணவனிடத்தில் ஈடுபடுவது, 'இவன் நமக்கென்று வாய்த்த ...வன்' என்கிற காரணத்தினாலே யல்லது, அழகுடைமை, அன்புடைமை, அறிவுடைமை ...போன்ற குணங் காரணமாகவன்றே; அப்படிக் கொண்டால், அக்குணங்களில்லாத ...த்த மனவேற்றுமை கொண்டிருக்க வேண்டிவருமன்றோ. அஃதேபோல, எம்பெருமான் ...த்திலும் நாம் அடிமைப்படுவது இயல்வாகவேயொழிய, அப்பெருமானிடத்துள்ள திருக் ...ம் பற்றியல்லவென்று. ஸ்ரீவசன பூடணத்தில் இது பரக்கப் பேசப்பட்டிருக்கின்றது. ...படியிருக்க, இங்கு ஆழ்வார் திருக்குணங்களுக்குத் தோற்றுத் தாம் ஈடுபட்டமையை ...படியிற் காட்டுகிறாரென்று சொல்லத் தகுமோவென்று ஒரு சங்கை தோன்றும்.

கேண்மின்; ஆழ்வார், எம்பெருமான் திறத்தில் இயல்வாகவே தாம் ஈடுபட்டவா ...றைப் பலவிடங்களிற் காட்டியுள்ளார்; அவற்றுள் ஓரிடமே இங்குக் காட்டுகிறோம். ...(5-3-5) *கடியன் கொடியன் நெடிய மால் உலகங்கொண்ட வடியன், அறிவருமேனி ...த்தன்; ஆகிலுங் கொடிய வென்னெஞ்சமவனென்றே கிடக்குமெல்லே!* என்பது ஒரு ...ரம். எம்பெருமானிடத்து ஆழ்வார் தமக்குண்டான ஈடுபாடானது குணங்கண்டன்று, ...ரூப ப்ரயுக்தமானதே என்பது இப்பாட்டில் நன்கு காட்டப்பட்டிருக்கின்றது. ஆழ்வார் ...களான நிலையில் நின்று பேசுகிற பாசுரமிது; தோழியை நோக்கிச் சொல்லுகிறது. ...ழியானவள் தலைமகளுக்கு எம்பெருமானிடத்து நிகழ்கின்ற அன்பைத் தணிக்க வேணு ...ற கருதி, 'அம்மா! உனது அன்பிற்கு இலக்கான தலைவன் நற்குணம் வாய்ந்தவனாகி ...ந்தால் நீ நன்றாக அன்பு செலுத்தலாம்; அந்தோ அவன் குணசாலியல்லனே; குணஹீந ...ன்றே; அவனிடத்து நீ காதல் கொள்ளத்தகுமோ?' என்றாளாம்; அது கேட்ட தலைவி, ...து அன்பன் குணஹீநனல்லன், குணசாலியே' என்று நிரூபிக்கவேண்டியிருக்க, அதை ...டு 'தோழீ! எனது கணவன் குணஹீநனென்பதை நான் தெரிந்து கொண்டவளவு நீ ...ந்து கொண்டாயல்லை; அவனது குணமின்மையை உன்னிலும் மிக அதிகமாகவே நான் ...ந்து கொண்டிருக்கிறேன் காண். எம்பெருமானுக்குக் குணஹாநி சொல்லும்போதும், ...ன் சொல்லவேணுமேயல்லது நீ சொல்லலாகுமோ? அவனையும் என்னையும் கூட்டி வைத் ...வேயன்றோ உன் பணி; அவனோடு உள்கலந்து பரிமாறினவள் நானேயல்லது நீ ...லையே; அவனிடத்துள்ளது நன்மையோ தீமையோ எதுவானாலும் எனக்குத் தெரிந்த ...வு உனக்குத் தெரிய ப்ரஸக்தியில்லையே; ஆகையாலே, அவனது குணக்கேடுதன்னையும் ...யால் நான் சொல்ல நீ கேளாய்' என்று பீடிகையிட்டுக்கொண்டு, 'கடியன் கொடியன் ...யமால் உலகங்கொண்ட வடியன் அறிவருமேனி மாயத்தன்'! என்று இரண்டடிகளால் ...து குணக்கேட்டைக் கூறினாள். இப்படிப்பட்ட குணக் கேடுகளைக் கோடிக்கணக்கா ...சொல்லவேணுமானாலும் நானன்றோ சொல்லவல்லேன்! 'தோழி! இவை உன்னாலும் ...ல்லப்போகாது; இதற்கென்றே இட்டுப் பிறந்த சிசுபாலன் போல்வாராலும் சொல்லப் ...காது' என்றாள். அதுகேட்ட தோழியானவள், 'அம்மா! இப்படி அவனது குணக்கேடு ...ன்கு அறிந்திருந்தா அவனிடத்து நீ அன்பு பூண்டிருக்கின்றனை? பேதையோ நீ' ...றாளாம். அதற்குத் தலைவி சொல்லுகிறாள், "ஆகிலும் கொடிய வென்னெஞ்சம் அவ

னென்றே கிடக்குமெல்லே" என்று. "தோழீ! என்னுடைய நெஞ்சு உலகின்படியன்றே; லோக விலக்ஷணமாயன்றோ எனது நெஞ்சிருப்பது. குணங்கண்டு பற்றுவதும், குணக்கேடு கண்டு கைவிடுவதும் நாட்டார்படியாயிருக்க, குணக்கேடுதானே பற்றுகைக்கு உறுப்பாக வன்றோ எனக்கிருப்பது" என்றாள். இங்ஙனே சொல்லுவதன் உட்கருத்து யாதெனில்; எம்பெருமானிடத்து குணக்கேடு இருப்பதாகச் சொல்லுகிறபடியன்று; குணங்கண்டு ஈடுபட்டமை இல்லை, ஸ்வரூப ப்ராப்தமாகவே ஈடுபட்ட வித்தனை என்பதேயாம்.

இதுவே நூற்கொள்கையாயினும், திருவாய்மொழி தொடங்கும்போதே *உயர்வற வுயர் நலமுடையவன்* என்று குணமுடைமை கூறி, அக்குணங்களுக்குத் தோற்றுத் தாம் ஈடுபட்டதாகத் தெரிவிப்பதிலும் தவறு யாதுமில்லை. இயற்கையாகவே ஈடுபட்டவிடத்தில் குணமுடைமையும் கூடினால், பொற்றாமரைப் பூவிற்குப் பரிமளமும் பொலிந்ததாகுமன்றோ. ஸ்ரீராமாயணத்தில் இளைய பெருமாள் (லக்ஷ்மணன்) திருவடியோடே (அனுமனுடன்) தம்மைப்பற்றிச் சொல்லிக்கொள்ளும்போது "அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர் தாஸ்யமுபாகத:" என்கிறார்; பெருமாளுடைய (ஸ்ரீராமபிரானுடைய) திருவுள்ளத்தினால், நான் அவர்க்கு உடன் பிறந்தவனாகிறேன்; என்னுடைய கருத்தினால் குணங்கட்குத் தோற்று அவர்க்கு அடிமைப்பட்டவன் யான்—என்பது இதன் பொருள். குணங்களுக்குத் தோற்று ஈடுபடுவதனால், ஸ்வரூப ப்ரயுக்தமான அடிமைக்கு யாதொரு குறையும் வாராதென்க.

ஸ்ரீ ராமபிரானுடைய வநவாஸ ஸமயத்திலே, சித்திர கூடம் கடந்த பிறகு, அத்ரி பகவானுடைய ஆச்ரமத்தில் பெருமாள் எழுந்தருளி, மாமுனிவரை அனுவர்த்தித்திருந்த பின்பு, அம்முனிவரது தேவியான அநஸூயையை ஸீதாபிராட்டி அநுவர்த்தித்திருக்கிறவளவிலே, அவ்வநஸூயையானவள் ஸீதையை நோக்கி, 'உற்றாரையும் செல்வத்தையும் விட்டுப் பெருமாள் பின்னே காட்டுக்கு வந்தது, தைவ யோகத்தாலே உமக்கு நன்றாகக் கூடிற்று; நகரத்திலிருக்கிலுமாம், காட்டிலிருக்கிலுமாம், பெண்டிர்க்குத் தெய்வம் பர்த்தாவே. நீர் இப்படியே எப்போதும் பெருமாள் விஷயத்திலே அநுகூலித்திருக்கக் கடவீர்' என்று சொல்ல, ஸீதை வெட்கமடைந்து கவிழ்தலையிட்டிருந்து சொல்லுகிறாள்—"மாமீ! எனக்குப் பெருமாளிடத்தில் அநுராகம் ஸ்வரூபமாகவே உண்டானதேயொழிய, அவருடைய குணங்களைக் கண்டன்று; ஆனால், அவர்தாம் குணங்களிற் சிறந்தவராகையாலே, என்னுடைய அனுராகத்திற்கு அக்குணங்களையே ஹேதுவாக நாட்டார் நினைப்பர்; எப்போதாவது அவர் குணஹீனராக இருப்பாரானால், அப்போது 'என்னுடைய அநுராகத்திற்குக் குணம் காரணமல்லவென்பதைப் பாருங்கள்' என்று நான் உண்மையையெடுத்துக் காட்டமுடியும். அப்படி ஒரு நொடிப்பொழுதும் காட்ட முடியாதபடி அவர் எப்போதும் குணக்கடலாகவேயிருப்பதால, நான் அவர் திறத்து இருக்குமிருப்பை உள்ளபடி நிரூபித்துக்காட்ட அவகாசம் பெறுகின்றிலேன்" என்றா. இதனாலும், எம்பெருமான் திறத்து அடிமைபுகுவது ஸ்வரூப ப்ராப்தமென்றும், ஆனாலும் திருக்கல்யாண குணங்கள் அப்பெருமானோடு நித்யஸம்பந்தம் பெற்றிருக்கையாலே அவ்வடிமை குணப்ரயுக்தமாகவும் தேறுகிறதென்றும் அறிகிறோம்.

பாசுரத்தில் "நலமுடையவன்" என்றுள்ளது. குணங்களுக்கு நலமென்று பெயரிட்டபடி. எம்பெருமானிடத்து விளங்குகிற குணம் எதுவானாலும், அது நலமாகத்தானிருக்குமென்று கொள்க. உலகில் சிலவற்றை நற்குணமென்று நாம் வழங்குகிறோமல்லவா!

எதனாலென்னில், எம்பெருமானிடத்தில் குணமென்று காணப்பட்டதனாலேயே. உலகில் ஒருவனுக்கு ஏற்றம் சொல்லவேண்டுமாகில், குணமுடைமையைக் கொண்டு சொல்லவேண்டும்; எம்பெருமானிடத்திலோவென்னில் அங்ஙனமன்று; எம்பெருமானிடத்திலிருப்பதனாலே குணங்களுக்கு ஏற்றம்!

இக்குணங்களுள் ஒரு குணத்தைப்பற்றி தைத்திரிய உபநிஷத்து (ஆனந்தவல்லியென்னுமொரு பகுதியில்) சொல்லப்புகுந்து, அது படுகிற பாடு மிக வியக்கத்தக்கது; அதைப்பற்றி இங்குச் சிறிது பேசுவோம்; எம்பெருமானது ஆனந்தமென்கிற ஒரு குணத்தை மாத்திரம் வருணிக்க இழிந்த அவ்வுபநிஷத்தானது, "யுவா ஸ்யாத் ஸாது யுவாத்யாயக:" என்று தொடங்கி, ஒரு கல்பனை பண்ணிக்கொண்டு செல்லுகின்றது; (அதாவது), ஒரு மநுஷ்யன்; அவன் நல்ல யௌவன பருவத்திலுள்ளவன்; ஸகல சாஸ்த்ரங்களையும் ஒன்று விடாமல் ஓதி, பிறர்க்கும் ஓதுவிப்பவன்; சோர்வு, சோம்பலின்றி எல்லாக் காரியங்களையும் வழுவாமற் செய்பவன்; தேஹத்திலும் மனத்திலும் திடமுள்ளவன்; இவ்வளவும் வாய்ந்தாலும் தரித்திரனாய் இருந்தாற் பயனில்லையே; அப்படியன்றிச் செல்வமெல்லாம் நிறைந்த பூமண்டலம் முழுவதையும் செங்கோல் செலுத்தியாளும்படியான ஒப்புயர்வற்ற விபவமும் வாய்ந்தவன். இப்படிப்பட்ட அதிசயங்கள் ஒரு மனிதனுக்கு மல்கியிருந்தால், அவனுக்கு உண்டாகக்கூடிய ஆனந்தத்தை முன்னேயெடுத்துக்காட்டி, அதைவிட நூறு மடங்கு அதிகமான ஆனந்தமுடையவர்களாக மநுஷ்ய கந்தர்வர்களென்ற வகுப்பைக்கூறி, அவர்களைவிட நூறு பங்கு அதிகமான ஆனந்தமுடையவர்களாக தேவகந்தருவர்களைக்கூறி, இப்படியே நூறு நூறு மடங்கு அதிகமான ஆனந்தமுள்ளவர்களாகப் பல வகுப்பினரைச் சொல்லிக்கொண்டு சென்று, முடிவிலே பிரமனைச் சொல்லி, அவனுடைய ஆனந்தத்தைவிட நூறுபங்கு அதிகமான ஆனந்தமுடையது பரப்ரஹ்மம் என்று சொல்லப்பார்த்து, "பரப்ரஹ்மத்தின் ஆனந்தத்தை இவ்வளவு மட்டமாகவா சொல்லிவிடுகிறது" என்று குறைப்பட்டு, "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்றபடி, மறுபடியும் கீழ்நோக்கித் திரும்புகிறது.

(அதாவது) கீழே சொல்லிக்கொண்டுவந்த (மனிதர் தொடங்கிப் பிரமனளவான] வரிசையில், கடையான ஸ்தானத்தில் நிறுத்தப்பட்ட பிரமனை, மனிதனுடைய ஸ்தானத்திலாக்கி, அங்கிருந்து ஆனந்தத்தை நூறு மடங்காகப் பெருக்கிக்கொண்டுவந்து, பழையபடியே பிரமனளவும் கூறிவந்து, அந்த பிரமனுடைய ஆனந்தத்தைவிட நூறு மடங்கு மேம்பட்ட ஆனந்தமுடையது பரப்ரஹ்மம் என்று சொல்லப்பார்த்து, அதிலும் பொருத்தம் காணாது, மீண்டும் முன்போலவே கீழ்நோக்கித் திரும்புகிறதாம். இப்படி இற்றைக்கும் இழிந்து கொண்டிருக்கிறதென்றும், அந்த ஆனந்த குணத்தை எல்லை கண்டு முடித்து, முற்றுப்புள்ளி யிட்டபாடில்லையென்றும், ஆளவந்தார், கூரத்தாழ்வான், பட்டர் முதலான பேராசிரியர்கள் உபநிஷத்தின் கருத்தை உள்ளபடியுணர்ந்து உரைத்தருளி யிருக்கின்றார்கள். ஆனந்த குணமொன்றைப்பற்றி இங்ஙனம் கூறியதானது, மற்றுமுள்ள எல்லாக் குணங்களுக்கும் உபலக்ஷணம் என்று மருளிச்செய்திருக்கிறார்கள். ஆக அப்படிப்பட்ட ஒப்புயர்வில்லாத அனந்த கல்யாண குணங்களையுடையனை எம்பெருமானை, ஆழ்வார் "உயர்வற வுயர்நலமுடையவன்" என்று சுருக்கமான சொற்றொடரால் குறிப்பிட்டது சிறந்த சாதுரியம்.

இனி, இரண்டாமடியிற் சென்று அநுபவிப்போம். "மயர்வற மதிநல மருளினன்" என்பதனால்—முதலடியிலே பொதுப்படக் குறிப்பிடப்பட்ட திருக்குணங்களிலே சிறந்த

தோர் திருக்குணம் இங்குக் கூறப்படுகின்றது. அதாவது, அருள் என்பது. உலகமெல்லாம் எம்பெருமானது அருளையே எதிர்பார்த்திருக்கின்றது. ஆனால், உலகர்களின் வாஞ்சை பல வகைப்பட்டதாதலால், ஒவ்வொருவர் ஒவ்வொன்றை விரும்பி, அதற்குரிய அருளைப் பெறுவர். விரும்பப்படும் பொருள்களுள் ஞானமும், பக்தியுமே மிகச் சிறந்தனவாகும். இவை இரண்டனுள் ஏதேனுமொன்று வாய்ந்தாலும் அதுவே ஸ்வயம் ஆனந்தரூபம்; அதற்குமேற்பட்ட ஆனந்தமே கிடையாது. அப்படிப்பட்ட மிகவுயர்ந்த பொருளை எம்பெருமான் தனது அந்தரங்க பக்தர்களுக்கே அருள் செய்யுமியல்வினனாதலால், அத்தகைய பக்தர்களுள் தலைவரான நம்மாழ்வார்க்கு அதை அருள் செய்தானாயிற்று.

[மயர்வு அற மதிநலம் அருளினன்] மயர்வு என்று அஜ்ஞானத்திற்குப் பெயர். அஜ்ஞானத்தில் நான்கு வகைகள் உண்டு. 1. ஒரு விஷயத்தைப்பற்றி அடியோடு ஞானமே உண்டாகாமை. 2. ஞானமுண்டாகி, அது நிச்சய ரூபமாக வல்லாமல், ஸந்தேஹ ரூபமாக இருத்தல். 3. ஸந்தேஹ ரூபமாகவுமல்லாமல் விபரீத நிச்சயமாகவேயிருத்தல். 4. உண்டான ஞானம் மறைந்து போதலாகிற மறப்பு. ஆக இந்நான்கும் அஜ்ஞானத்தின் வகைகள்.

இவற்றுக்கு ஓர் உதாரணம் காட்டுவோம். லவணம் என்கிற சொல்லை ஒருவன் கேட்டிருந்தான்; ஆனால் அதன் பொருளை அவன் அறியான்; அதன் பொருள் இன்னதென்றே தெரிந்துகொள்ளப்பெறாத நிலைமை முதல் வகை. ஒருவன் அச்சொல்லின் பொருளைக் கேட்டிருந்தான்; ஆனால் நிச்சயமான அறிவு இல்லை; லவணமென்றால் உப்போ, பருப்போ! என்று ஐயுற்றிருக்கிறான்; அந்த நிலைமை இரண்டாம் வகை. ஒருவன், லவணம் என்றால் கடுகு என்று விபரீத நிச்சயத்தோடு இருக்கிறான். அந்த நிலைமை மூன்றாம் வகை. ஒருவன், ஸந்தேஹமோ, விபரீத நிச்சயமோ ஏதுவுமின்றி, முன்பு க்ரஹித்திருந்த பொருளை அறவே மறந்தொழிகிறான்; அந்த நிலைமை நான்காம் வகை. ஆக, இந்நான்கு விதமான அஜ்ஞானமும் தொடராதபடி ஆழ்வார்க்கு எம்பெருமானுடைய அருள் வாய்த்ததென்க.

'மதிநலம்' என்றவிடத்து, ''மதியையும் நலத்தையும்'' என்று இரண்டாகக்கொண்டு உரை செய்வர் சில ஆசிரியர்கள்; ஞானத்தையும் பக்தியையும் அருள் செய்தானென்றதாகும். இப்படியல்லாமல், மதி நலம் என்பதை (நலம் மதி) என மொழி மாற்றி, பக்தியாக உருக்கொண்ட ஞானத்தை யருளினன் என்பாருமுளர். இப்போது, ஞானம் வேறு, பக்தி வேறு என இரண்டல்லாமல், ஞானமுண்டாகும்போதே அது பக்தி ரூபமாகவே உண்டானதாகச் சொல்லுகிறது. சில பொருள்கள், முளைக்கும்போதே வயிரம் பற்றி முளைப்பதுண்டே; அதுபோல, உணர்வு முளைக்கும்போதே பக்தியின் வடிவாக முளைப்பது எம்பெருமானது சிறந்த அருளின் காரியமாகும்.

இன்னார்க்கு அருளினன் என்று சொல்லப்படவில்லை யிங்கு. மேலே (1-7-4) ''மயர்வற என் மனத்தே மன்னினான் தன்னை'' என்றருளிச் செய்திருப்பதற்குச் சேர, ஆழ்வார் தமக்கு அருளினதாகச் சொல்லுவதுதான் ஏற்கும். அப்படியானால், 'எனக்கருளினன்' என்று ஏன் கூறவில்லை யென்று கேள்வி எழும். இதற்கு ஆசாரியர்கள் கூறுவதாவது எம்பெருமானுடைய அருளைப் பெறுவதற்கு முன்பு, தாமுளராக நினைத்திலாதவராதலால், [தம்மைக் கண்டிலராதலால்] 'எனக்கு' என்று கூறிற்றிலர் என்று.

உலகில் உதாரர்களிடத்து யாசகர் வந்து பலகால் இரக்க அவர்கள் அருள்செய்வதுமுண்டு; ஆழ்வார்க்கு எம்பெருமான் அருள் செய்தது அப்படியோ? என்னில்; இங்கு அரு

ஒரு ஹேதுவும் சொல்லாமையாவே, தம் தலையில் நினைவின்றியே யிருக்க, எம்பெரு மான் தானே வந்து தன் பேறாக அருள்செய்தானென்னுமிடம் தெரிவிக்கப்பட்டதாகிறது. ஈசருடைய வேண்டுகோளுக்கோ, நிர்ப்பந்தத்திற்கோ உட்பட்டுக்கொடுப்பதானது அருள் செய்ததாகாது. எதிர்த்தலையில் அபேக்ஷையின்றியே யிருக்கக் கொடுத்தமை சொல்லிற்று.

இங்ஙனம், தானாகவே வந்து அருளினவன், தன்னருள் கொள்வாரில்லாத வொரு வனோவென்ன, அப்படிப்பட்டவனல்லன்; நித்யஸூரிகளும் முக்தர்களுமான பெருந்திரளை ஒரு நாடாக வுடையவன் என்கிறது மூன்றாமடி [அயர்வறுமமரர்களதிபதி] என்று. 'மயர்வு' என்றதற்குச் சொன்னபொருள் 'அயர்வு' என்கிறவிதற்கும் ஏற்கும். சுவர்க்கத்திலுள்ள இந்திரன் முதலானார்க்கும் அமரர்களென்னும் பெயர் உண்டானாலும், இங்கு அவர்கள் கொள்ளப்படுவதற்குத் தகுதியில்லை; 'அயர்வு அறும்' என்கிற அடைமொழி (விசேஷணம்) அவர்களுக்கு இணங்காதன்றோ. ஆகவே, ஸ்ரீ வைகுண்டமென்கிற திருநாட்டிலுள்ள நித்ய ஸூரிகளையும், முக்தாத்மாக்களையுமே இங்குக் கொள்ளவேணும். நித்யஸூரிகள் பக்கலிலே அயர்வின் ஸம்பந்தம் ஒரு நாளுக்கிடையாது. ஏனெனில், ஸம்ஸார நிலத்தில் ஒருபோதும் வாடாதவர்களான ஸேநாபதியாழ்வான், திருவனந்தாழ்வான், கருடாழ்வான் முதலான வர்களே நித்யஸூரிகளெனப்படுதலால், அன்னவர்களுக்கு அஜ்ஞானத்தின் ஸம்பந்த கந்தமும் இருக்கத் தகுதியில்லை யன்றோ. இனி, ஸம்ஸார நிலத்தில் பலகால் பிறப்பதும் இறப்பதுமா யிருந்து, பகவத் பாகவத ஆசார்ய கடாக்ஷ விசேஷங்களாலே அந்த மாயப்பற்று அற்றுத் திருநாடு புகுந்தவர்களே முக்தர்களெனப்படுதலால், அவர்களுக்கு என்றைக்குமே அஜ்ஞானமில்லை யென்னப் போகாது; அஃது இருந்து கழிந்தவர்கள் என்னும் பொருளில், அவர்களை மயர்வற்றவர்களென்கிறது. ஆக, அயர்வின் தொடர்பு ஒருபோதுமில்லாதவர்களும், அது இருந்து கழிந்தவர்களுமான நித்யமுக்தர்களை ஒரு நாடாகவுடைய எம்பெருமான், தன்னருள் கொள்வாரில்லாதவன் போல வந்து தமக்கருள் செய்தானென்று சிறந்ததொரு குணவிசேஷத்தைக் கூறி அன்னவனது சுடரடியைத் தொழுது உஜ்ஜீவிக்குமாறு தம் திரு வுள்ளத்திற்கு உரைத்தாராயிற்று.

இப்பதிகத்தில் மேலுள்ள பாசுரங்களெல்லாம் எம்பெருமானுடைய ஸ்வரூபகுண விபூதி சேஷ்டிதங்களை வேதங்களில் [உபநிஷத்துக்களில்] கூறிய கட்டளையிலே விவரிப்பன வாதலால் "உயர்வே பரன்படியை யுள்ளதெல்லாம் தான்கண்டு உயர்வேத நேர் கொண்டு உரைத்து" என்றருளிச் செய்தாராயிற்று. .... .... .... (*)

---

## மத்திறுலோலைசபடுத்த தயிரரவர்.

இங்ஙனே மகுடமிட்டு ஒரு வியாஸ மெழுதக் குதூஹலமுண்டாயிற்று. இதை இரண்டு பகுதியாக எழுதினேம். முதற் பகுதி நமது அம்ருதலஹரீ பத்ரிகையில் (நெ. 172ல்) வெளியிடப்பட்டது. பிற்பகுதி இங்கு வெளியிடப்படுகிறது. ஸ்வாபதேசம் பென்றும் வ்யங்க்யம் மென்றும் ஸ்வாபதேசார்த்தமென்றும் கூறப்படுகின்ற உள்ளுறை பொருள் இங்கு உணர்த்தப்படுகின்றது. * காசும் பிறப்புங் கலகலப்பக் கை பேர்த்து வாச நறுங்குழலாய்ச்சியர் மத்தினொலோசைபடுத்த தயிரரவம் கேட்டிலையோ * என்னுமளவும் ஒரு வாக்கியமாதலால் இவ்வாக்கியத்திற்கு விசேஷார்த்தம் தெரிவிக்கலாகிறது. இதில் ஆச்சியர் என்றது முன்னம் கொள்ளப்படவேண்டும். இச் சொல்லினால் யார் விவக்ஷிதர்களென்பதைக் கேண்மின்.

ஒரு ஸ்வாமி தம்முடைய வீதியில் பெருமா ளெழுந்தருளும்போதெல்லாம் தவறாமல் வடைக்காய் பழம் முதலான உபஹாரம் ஸமர்ப்பிப்பது வழக்கம். அவர் பெருமாள் புறப்

பாட்டுத் தினத்தை முன்னடியே தெரிந்துகொண்டு உபஹாரம் ஸித்தப்படுத்தி வைப்பர். ஒரு நாள் இரவில் திடீரென்று பெருமாள் வீதியி லெழுந்தருளிவிட்டார். அப்போது உபஹாரமொன்றும் ஸித்தமாக இல்லாமையால் ஆபத்ஸகியான அவர் பெருமாளருகே வந்து

* ரத்நாகரஸ்தவ க்ருஹம் க்ருஹிணீ ச பத்மா
கிம் தேயமஸ்தி பவதே புருஷோத்தமாய |
ஆபீரவாமநயநாஹ்ருதமாநஸாய
தத்தம் மநோ யதுபதே த்வமிதம் க்ருஹாண || *

என்னு மிந்தச்லோகத்தை விண்ணப்பஞ்செய்து அஞ்ஜலி பண்ணினராம். (இதன் பொருளாவது;) பிரானே! நீயோ ரத்நாகரத்தை இருப்பிடமாக வுடையை; உனது தேவியாரோ ஸாக்ஷாத் ஸ்ரீமஹாலக்ஷ்மி; ஆகவே அவாப்த ஸமஸ்தகாமனான வுனக்கு நாயினேன் ஸமர்ப்பிக்கத்தக்கது என்னவுளது? எதுவுமில்லை. உனக்கு இல்லாததொன்றையன்றோ நான் ஸமர்ப்பிக்கவேணும். உன்னுடைய உள்ளத்தைத் திருவாய்ப்பாடிப் பெண்டுகள் கொள்ளை கொண்டு போய்விட்டதனால் உனக்கு மனஸ்ஸென்கிற வொரு வஸ்துதான் இல்லையாயிற்று; உனக்கில்லாததை ஸமர்ப்பிக்கவேணுமென்றாசைகொண்ட நான் மநஸ்ஸையே ஸமர்ப்பிக்கிறேன்—என்பதாம். கோபிகள் பகவானுடைய மனத்துக்கு இனியவர்கள் என்பது தேற்றம். * அணியாச்சியர் சிந்தையுள் குழகனார் * என்ற நாச்சியார் திருமொழியை இங்கு ஒருவாறு நினைக்கலாம். எம்பெருமானுக்கு மனோஹரர்களான வ்யக்திகளே இங்கு ஆச்சியர் என்ற சொல்லினால் விவக்ஷிதர்களெனக் கொள்க. இவர்கள் 'வாசநறுங்குழல்' என்று விசேஷிக்கப் பட்டுள்ளார்கள். வாசனைப் பண்டங்களினால் கமழ்கின்ற தலையை யுடையவர்கள் என்றபடி. தலைக்கு ஏற்றம் எதனாலென்னில்; வணக்கத்தினால். * ததிரொ யசஸ்வினத * என்றார்களே. வணங்காமுடி மன்னர்களாக இராமல் * நமந்தி ஸந்தோ த்ரைலோக்யாதபி லப்தும் ஸமுந்நதிம் * என்கிறபடியே வணக்கமே வடிவெடுத்திருப்பவர்கள் நறுங்குழலாளர்கள். (வாசம் என்று வாசனைப் பண்டங்களைச் சொல்லுகிறது. அவற்றால் பரிமளிக்கின்ற தலையை யுடையவர்களென்கை.) இங்கு வாசனைப் பண்டமாக விவக்ஷிதம் எதுவென்னில், பலவகைப்பட்ட சாஸ்த்ரங்களில் நிரம்பிய ஞானமேயாகும். அல்பஸ்வல்ப ஞானம் படைத்தவர்களாயிருந்தால் *ந நமேயம்* என்ற ராவணனை யொத்திருப்பர்கள். பரிபூர்ண ஜ்ஞானசாலிகளே விநயஸம்பந்நர்களா யிருப்பர்களாதலால் அத்தகைய மஹான்களை வாசநறுங்குழலாச்சியர் என்றதாயிற்று. இவர்கள் லோகோஜ்ஜீவனார்த்தமாக இரண்டுவகையான காரியங்களைச் செய்து போருவர்கள். (1) பிற்பட்டவர்களுக்கும் பயன்படும்படி சிறந்த நூல்களைத் தமது கையினால் எழுதிவைப்பர்கள். (2) வேதமனைத்துக்கும் ஸ்ரீஸூக்திகளை கம்பீரமான திருமிடற்றோசை விளங்கும்படி உபதேசித்துப் போருவர்கள். இவற்றுள் முந்தின காரியத்தை *காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து* என்பதனால் தெரிவித்து, பிந்தின காரியத்தை * மத்தினாலோசைபடுத்த வென்பதனால் தெரிவிக்கின்றாளாண்டாள். (இதை விவரிப்போம்.)

காசு, பிறப்பு என்ற சொற்கள் ஆபரண விசேஷங்களைத் தெரிவிப்பன. ஆத்மகுணங்களையே பூஷணமென்கிறது. "சமமும் தமமும் ஆத்ம குணங்களில் ப்ரதாநம்" என்ற ஸ்ரீவசந பூஷண திவ்யஸூக்தியின்படி இவ்விரண்டு சிறந்த குணங்களே இங்கு பூஷணமாகச் சொல்லப்பட்டன. கை பேர்த்து என்றது கையினாலெழுதி என்றபடி. மஹான்கள் எழுதியருளின திவ்ய க்ரந்தங்களில் சமதமாதி ஆத்ம பூஷணங்கள் கலகலவென்று ஒலி செய்து நிற்கும்என்க.

முநிவர்கள் தாங்களும் சமதம ஸம்பந்நர்களாயிருந்து, கற்பவர்களையும் அட்படிப்பட்டவர்களாக ஆக்கவல்லவர்களென்பது பரம தாற்பரியம்.

இனி *மத்திஞலோசைபடுத்த தயிரரவம்* என்றதன் உட்பொருள் கேளீர். *மூன்று ...யிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டுமாபோலே மூன்றுவேதத்திலும் ...ஸாரத்தையுமெடுத்தது* என்று பிள்ளை லோகாசார்யர் முமுக்ஷுப்படியிலருளிச்செய்...துமது இங்கு நினைவுக்கு வரவேணும். ஆசார்யஸூக்தி ஸந்தாநிதியில் ஆழ்ந்தவர்களுக்கு ...நினைவுக்கு வந்தே தீரும். 'மத்தினால்' என்றவிடத்து *மறைப்பாற் கடலைத் திருநாவின் ...த்தாற் கடைந்து* என்ற பிள்ளைப்பெருமாள் பாசுரம் நினைவுக்கு வரவேணும். தங்கள் ...வ பசைத்து ஸகல வேத ஸாரார்த்தங்களையும் கம்பீரமாக அருளிச்செய்யுமவர்களின் திரு...ற்றோசையைக் கேட்டிலையோ? என்றதாயிற்று. நம்பிள்ளை தனியன் அமைந்திருக்கும் ...காண்மின்—* வேதாந்த வேத்யாம்ருத வாரிராசே: வேதார்த்த ஸாராம்ருத பூரமக்ர்ய...மாதாய வர்ஷந்தம் * என்று. வேதார்த்த ஸாரமாகிற அமுத வெள்ளத்தையே பொழிவராம் ...பிள்ளை. அவருடைய திவ்ய ஸூக்திகளைக் கேட்கப்பெறவேணுமென்று ஆசௌந்தம் ...ண்ணினபடி. இது ஸம்க்ஷிப்தமாகத் தெரிவித்த விசேஷார்த்தமென்று கொள்க. *

---

## சந்தா செலுத்தியவர்கள்.

1. ஸ்ரீ ஆசால் சேஷாச்சாரியர், (Advocate), திருவல்லிக்கேணி.
2. P. R. ஸ்ரீனிவாஸ ஐயங்கார், ஜவுளிக்கடை, கும்பகோணம்.
3. C. கிருஷ்ணசாமி, நுங்கம்பாக்கம், மதராஸ்.
4. V. S. வெங்கடாச்சாரியர், பாளையம்கோட்டை.
5. K. V. Raghavachar, (ஆடிடர்), வேலூர்.
6. T. A. கிருஷ்ணமாச்சாரியர், (ஆடிடர்) வேலூர்.
7. காஞ்சிபூர்ணசெட்டி, (செவ்வாபேட்டை), சேலம்.
8. திருமாணிக்குழி லக்ஷ்மீநாராயண ரெட்டியார், V. M.
9. P. லக்ஷ்மீநாராயண ரெட்டி, (ஆலந்தூர்), மதராஸ்.
10. A. கண்ணுசாமிப்பிள்ளை, விருத்தாசலம்.
11. N. சுப்பராயப்பிள்ளை, T. விருதாங்கன்.
12. A. ஸ்ரீநிவாஸன், T. நகர், மதராஸ்.
13. A. திருமலை ஐயங்கார், (வேப்பேரி), மதராஸ்.
14. M. R. சேஷாத்ரி ஐயங்கார், (மண்ணடி), மதராஸ்.
15. N. வேணுகோபால நாய்க்கர், (Advocate), சிந்தாத்திரிபேட்டை, மதராஸ்.
16. R. திருவேங்கடசாமி ஐயங்கார், (எக்மோர்), மதராஸ்.
17. M. ராஜகோபாலப்பிள்ளை, கு. பூவிழுந்தூர்.
18. D. ரங்காச்சாரியர், (Advocate), செங்கற்பட்டு.
19. P. ஆழ்வார் ஐயங்கார், ரோல்
20. D. ராஜு நாயுடு, பண்ருட்டி.
21. R. ஜகன்னாத ஐயங்கார், பாண்டிச்சேரி.
22. வித்வான் சீதாராம ஐயங்கார், மதுரை.
23. M. ஸ்ரீநிவாஸன், M. A. B. T., பொன்னேரி.
24. S. சத்யமூர்த்தி ஸ்வாமி, குவாலியர்.
25. D. திருவேங்கடாச்சாரியார், கடலூர்.
26. S. யதிராஜலு நாயுடு, திருவாரூர்.
27. உபயவேதாந்த ப்ரகடன சபை, மதுரை.
28. ஸ்ரீ. உ. வே. எம்பார் சடகோபாசாரியர், மல்லியம்.

ஸ்ரீ:

# வடநாட்டுத் திருப்பதி யாத்திரை விளம்பரம்.

## (ஸ்ரீகாஞ்சீ P. B. அண்ணங்கராசாரியருடைய அறிக்கை.)

அடியேனுடைய வாழ்நாளில் இதுவரை வடநாட்டுத் திருப்பதி யாத்திரையை இருபத்தோரு தடவை செய்திருக்கிறேன். பதரிகாச்ரமம் வரையிற்சென்று ஸேவித்து வந்தது மூன்று தடவை மட்டும். ஹரித்வார ஹ்ருஷீகேசாந்தமாகச் சென்று ஸேவித்தது இருபத்தோரு பர்யாயம். இடையில் மூன்று வருஷ காலமாகச் சென்று ஸேவிக்கப் பெறுதது பெரிய குறையாகவே யுள்ளது. அக்குறை தீர 12—6—58 தேதியில் வடநாட்டு யாத்திரை புறப்பட எம்பெருமானது நியமனத்தை யடியொற்றி நிச்சயித்திருக்கிறது. ரைல் மூலமாகவே யாத்திரை நடைபெறும். ஆனால் ரைலில் சிரமமில்லாத படிக்குச் சில ஸௌகரியங்களைச் செய்து கொள்ள ஏற்பாடு நடைபெறும். இந்த யாத்திரையில் அந்வயிக்க உத்ஸாஹமுள்ள பக்தர்கள் நமக்குத் தெரிவித்துக் கொள்ளலாம். இந்த யாத்திரையில் வடக்கே யுள்ள க்ஷேத்ர தீர்த்தங்களில் ஒன்றும் விடுபடாது. பஞ்சத்வாரகைகளும், கயா, காசீ, பிரயாகை, சித்ரகூடம், அயோத்யா, நைமிசாரணியம், ஹரித்வாரம், பதரிகாச்ரமம், மதுராப்ருந்தாவனம், புஷ்கரம், உஜ்ஜயினி, பஞ்சவடி முதலிய ஸகல க்ஷேத்ரங்களும் ஸேவிக்க ப்ராப்தமாகும். மஹா நகரங்களும் காணலாகும். ஸாளக்ராம மொன்றுதான் விடுபடும். ரைல் டிக்கெட் செலவுகளுக்கோ ஸாப்பாட்டுச் செலவுகளுக்கோ யாரிடத்திலும் செலுத்தாமல் அவரவர்கள் தாங்களே கையில் வைத்துக்கொண்டும் செலவு செய்து கொள்ளலாம். ஸ்தலவஸதிகள் முதலான ஸகல ஸௌகரியங்களும் செய்து கொடுப்பது நம்முடையபணி. இதைப்பற்றின விசேஷங்களைத் தெரிந்து கொள்ள விருப்பமுடையவர்கள் நமக்குக் கடிதமெழுதிக் கொள்ளலாம்.



15–2–58.

இப்படிக்கு,
P. B. அண்ணங்கராசாரியர்,
சின்ன காஞ்சீபுரம்.

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ தேசிக ஸஹஸ்ரநாம விமர்சம்.

(ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம். அண்ணங்கராசாரியர்.)

ஸ்ரீதேசிககுரோ: அஷ்டோத்தரஸஹஸ்ரநாமக்ருதீ ।
அதிக்ருத்ய விவாதயோக்யம் விமர்சதாராயாபி ஸாதயாமஹே ॥

## நூன்முகம்—உத்தேச்ய நிரூபணம்.

1. "ஸ்ரீதூப்புல் வேதாந்த தேசிகன் அஷ்டோத்திர ஸஹஸ்ரநாமம்" என்றொரு சிறு புத்தகம் ஒரு பக்தரால் ஸமீப காலத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டு, பத்ரிகையில் விமர்சத்திற்காக நம்மிட மனுப்பப்பட்டது. அதனால் இந்த விமர்சம் வெளியிட ப்ராப்தமாகிறது. குணதோஷங்களை உள்ளபடி யெடுத்துக்காட்டி நிரூபணம் செய்வதுதான் விமர்சமென்பது. ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகனுடைய திவ்யகுணாநுபவரூபமாகத் தோன்றியது இப்புத்தகம்—என்பதே இதன் குணகீர்த்தனமாகும். பலவகை விபர்யாஸங்கள் இதில் புகுந்திருக்கின்றனவென்று ப்ராமாணிக ஸஜ்ஜந ஹ்ருதயங்கமமாக நிரூபிக்க வேண்டுவது அவர்ஜநீயமாகிறது. குற்றங்களை நற்றமாகக்கொள்வதோ, எடுத்துக் கூறுமலிருப்பதோ மிகச் சிறந்த குணமேயாயினும் இதற்கு விஷயநியமமுண்டு; ஸகல விஷயங்களிலும் இக்குணத்தைப் பூர்வாசாரியர்களும் மேற்கொண்டதில்லை. "குணதோஷௌ பாயோ ர்குணைஸ்து ஜனோ ஸஜ்ஜநா விஶேஷஜ்ஞா: । ஶிரஸா ஶ்லாகதே பூர்வம் பரம் கண்டே நியச்சதி." என்றபடி வர்த்திப்பது சில விஷயங்களுக்கே தகும். தவறுகளைத் தவறென்று எடுத்துக்காட்டுவது உலக நன்மையின் பொருட்டே யாகுமென்பதில் ஐயமில்லை. குற்றமற்ற இடங்களிலும் கேவலம் அஸூயையினாலோ மாச்சரியத்தினாலோ குற்றமிருப்பதாகக் கூறுவதுதான் நிந்திக்கத்தக்கதாகும். அத்தகைய நிந்தநீய ப்ரவ்ருத்தியை நாம் ஒருநாளும் கனவிலும் கருதோம். ஸத்யத்திற்கு மாறான விஷயங்களோ அஸம்பத்தோக்திகளோ கண்ணில்பட்டால் அவற்றை ஸர்வஸம்ப்ரதிபந்ந ப்ரமாணங்களைக் கொண்டு நிரஸிப்பது நம்முடைய பணியென்பதை ப்ராமாணிக வுலகம் பெரும்பாலு மறிந்துள்ளது.

## பிறருடைய விப்ரதிபத்தியை விலக்குதல்.

2. ப்ரக்ருதம் ஸ்ரீ தேசிகன் விஷயமான ஸ்துதி க்ருதியை நாம் விமர்சிக்கப் புகுந்து இவ்வனே அவதாரிகை யிடுவதைக் காணும் சிலர் 'இந்த விமர்சம் தேசிகத்வேஷத்தினால் அவதரிப்பது போலும்' என்று விபரீத க்ரஹணம் பண்ணவுங்கூடும். அது மிகவும் பிசகு. தேசிகனுடைய திவ்யஸூக்திகளையெல்லாம் ஸுபரிஷ்க்ருதமாக வெளியிடுவதும், அல்லும் பகலும் அவற்றுக்கு வியாக்கியானங்களையே யெழுதுவதும், அந்த திவ்யஸூக்திகளையே நிச்சலும் சிந்தனைசெய்து ப்ரவசநமும் செய்வதும், தேசிகன் விஷயமான ஸ்துதி நூல்களை யியற்றுவது

மான கைங்கரியங்களே போது போக்கான நம்மைப்பற்றி, இவற்றில் ஏகதேசமும் செய்ய இல்லாத பிறர் எங்ஙனே நினைத்தாலும் அதனால் நமக்கு ஒரு ஹானியுமில்லை. *மனக்குற்ற மாந்தர் பழிக்கில் புகழ்* என்ற அமுதனாருடைய ஸ்ரீஸூக்தியையே அநுஸந்தித்து நிற்போம்.

## ப்ரக்ருதவிமர்சத்தின் ஆவச்யகதை.

3. பகவத் பாஷ்யகாரருடைய சரித்திர மெழுதுவதாக ஒருவர் முன்வந்து 'ஸ்ரீ பாஷ்யகாரர் ஆளவந்தார்க்கு ஸ்ரீ பாஷ்ய ப்ரவசநம் செய்தருளினார்' என்றெழுதிவைத்தால் இதனால் ஸ்ரீ பாஷ்யகாரர்க்கு அதிசயம் விளைகிறதென்றே வைத்துக்கொண்டாலும் அஸத்கதா கீர்த்தனமென்று கொண்டு ப்ராமாணிகர்கள் அதனை மறுக்கவே ப்ராப்தமாகும். அதுகொண்டு அவரை பாஷ்யகாரர்பெருமையைப் பொறாதவரென்றோ பாஷ்யகாரத்வேஷி யென்றோ விவேகிகள் வசைகூறார். ஸூக்த்யாதா, யதார்த்த வக்தாவென்று உகந்திடுவர்கள். இதே ரீதியை ப்ரக்ருதத்திலும் கொள்வது. நாம் நிரூபிக்கும் விஷயங்களில் ஆர்ஜவ முள்ளதா? இல்லையா? என்பதை மட்டும் தடஸ்தர்கள் பரிசீலிப்பார்களாக.

## ப்ரக்ருதவிமர்ச லக்ஷ்யங்கள் மூன்று பகுதிகளென்னுதல்

4. இப்போது நம்முடைய விமர்சத்திற்கு இலக்கான புத்தகத்தில் மூன்று பகுதிகள் உள்ளன; (1) முகவுரை என்பது (28 பக்கங்கள் கொண்டது) முதற்பகுதி; (2) ஸ்ரீமங்கமாந்த மஹா தேசிக நாமாஷ்டோத்தர சதநாமாவளி: என்பது (16 பக்கங் கொண்டது) இரண்டாம் பகுதி. (3) ஸ்ரீ தேசிக ஸஹஸ்ர நாமாவளி யென்பது (76 பக்கங் கொண்டது) மூன்றாம் பகுதி. இவற்றுள் முதற்பகுதியாகிய தமிழ்ப்பகுதியை யெழுதியவர் அஸ்மத் பரம ஸுஹ்ருந்மணி யான ஸ்ரீமது பயவே. திருக்குடந்தைகண்ண னென்கிற ஸ்ரீநிவாஸ ராகவாசாரியர்—என்று காண்கிறது. இதை நாம் சிறிதும் நம்புகின்றிலோம். கூடியமட்டில் நிரூபகரென்று கொள்ளத்தக்கவரும், நம்முடைய ஸகல க்ரந்த ப்ரந்தங்களையும் கண்டபாடம் செய்திருப்பவரும், வீண்வம்பு விஷயங்களில் தலையிட்டுத் தாபங்கொள்ளமாட்டாதவருமான அவர் இஃது எழுதி யிருக்கமாட்டாரென்றே நமது உறுதி. வாக்யரசனைகள் ஸம்ப்ரதாய க்ரந்தங்களில் பரிசயமும் ப்ரவேசமுமில்லாதவருடையனவாகக் காண்பது கொண்டும் இங்ஙனே நிச்சயிக்கலாகிறது. வஸ்துஸ்திதியை எம்பெருமானே அறியவேணும். அது எழுதின வ்யக்தி ஆராயினுமாகுக. அதில் உகந்து கொள்ளக்கூடிய சொற்களும் பொருள்களும் அதிஸ்வல்பம். ஸ்தூலத்ருஷ்டியில் தேசிகன் வைபவத்தில் தத்பரமானதென்னுகொண்டு உகக்கலாம். அதிலிருந்து இப்போது சில விஷயங்களைப், இந்நூலின் முடிவில் சில விஷயங்களையும் விமர்சிப்போம்.

## ப்ரக்ருதவிமர்சத்தின் ஜீவநாடி யுரைத்தல்.

5. "ஸ்ரீ தேசிகனுடைய ஆசார்யத்வ பூர்த்தியைக்கண்டு ஸ்ரீ பிள்ளை லோகாசார்யரும் ஸ்ரீ பாஷ்யத்தை அதிகரித்த ஸ்வாமி விஷயமான * சிறொன்று தூப்புலென்கிற தனியனையும் ஸாதித்தார்" என்று (பக்கம் 13ல்) இவர்கள் எழுதியிருப்பது அஸம்பத்தமும் அப்ராமாணிகமும் ஆதாரமற்றதுமாம் என்று நிரூபிப்பது இந்த விமர்ச நூலுக்கு ஜீவநாடியானது. அந்த விசாரத்தை நாம் பிறகு எடுத்துக்கொள்வோம். எழுதினவருடைய யோக்யதையும் ப்ராமாணிகத்வமும் எத்தகைத்து என்பதை முன்னம் நிரூபித்துவிட்டால் மிக நன்று என்று கருதி முன்னம் பொதுவான சில விமர்சங்களைச் செய்கிறோம்.

## — அஷ்டோத்திர மென்பது அஸம்பத்தமென்னுதல். —

6. இப்புத்தகத்தின் மேலினும் உள்ளினும் கொட்டை யெழுத்தால் அஷ்டோத்திர ஸஹஸ்ரநாமம் என்று பதிப்பித்திருக்கின்றது. 'அஷ்டோத்தர' என்னும் ஸம்ஸ்க்ருத சப்த மானது தமிழில் (அஷ்டோத்திர) என்றுவதற்கு ஒரு உபபத்தியும் கிடையாது. பரிஹாஸ்யமு மாகும். பாத்ரம், யாத்ரை, ஸ்தோத்ரம், ஸூத்ரம் இத்யாதிகளான சொற்களைப் பாத்திரம், யாத்திரை, ஸ்தோத்திரம், ஸூத்திரம் என்று பதிப்பிக்கிறார்களென்பதைக் கண்ட இவர்கள் உத்தரம் என்பதை உத்திரம் என்று பதிப்பிக்கவேணுமெனக் கொண்டார்களந்தோ. நாம் எழுதும் விஷயங்களினால் பொதுமக்களும் உபகாரம் பெறுவது வழக்கமாதலால் அத்தகைய உபகாரம் இந்நூலினாலும் பெரிதுமுண்டாகும். ப்ரக்ருதத்தில் கேண்மின். நன்னூல் பதவிய லில் வடமொழி விகாரம்பற்றி இரண்டு சூத்திரங்களுண்டு; அவற்றுள் இரண்டாவது சூத்திரம் "இணைந்தியல்காலை யரலக்கு இகரமும்" என்று தொடங்குவதாம். இது ஸம்யுக்தாக்ஷரத்தைப் பற்றின விதி. ஸம்ஸ்க்ருதத்தில் ய, ர, ல. என்னு மெழுத்துக்களோடே ஸம்யுக்தமாகிறவிடத் தில், பின்னின்ற அந்த யகர ரகர லகரங்கட்கு முன்னே இகரம் வருமென்று இதனால் சொல் லிற்று. பாக்யம் என்ற வடசொல் தமிழில் பாக்கியமென்றாகும்; காத்ரம் என்ற வடசொல் தமிழில் காத்திரமென்றாகும்; சுக்லம் என்ற வடசொல் தமிழில் சுக்கிலமென்றாகும். இங்ஙனே இகரம் வருவது இத்தகைய ஸம்யுக்தாக்ஷரஸ்தலங்களில்மட்டுமே. உத்தரம் என்கிற வட சொல்லில் தகார ரேபங்கள் ஸம்யுக்தமாக இல்லை. தகாரத்தோடு தகாரம் ஸம்யுக்தமாக இருக் கிறதேயொழிய தகாரத்திற்கும் ரேபத்திற்கும ஸம்யுக்தத்வமில்லை. ஸத்ரம், பத்ரம், சித்ரம் என்பனபோல் உத்த்ரம் என்று (வடமொழியில்) சொல்வடிவமிருந்தால் அது தமிழில் உத்திர மென்றாகும். உத்தரம் என்றே வடமொழியிலுள்ளதான இச்சொல் உத்திரமென்று விகாரப் படுவதற்கு உபபத்திலேசமும் கிடையாது. வேங்கடாசாரியர் என்பதை வெங்கிடாசாரியர் என்று எழுதுவதோடொக்குமிது. அந்த அஸம்பத்தத்தையும் இப் புத்தகத்திலேயே காண லாம்; (பக்கம் 4ல்) "திருவேங்கிட முடையான்" என்றெழுதியுள்ளார். நக்ஷத்ர கணனையில் உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி என்று சிலர் வழங்குவதை இங்கு நிதர்சனமாகக் காட்டலாகாது. தனித் தமிழ்ச் சொற்களான அவற்றை ஒருவாறு ஸமர்த்திக்க முடிந்தாலும் அஷ்டோத்திர மென்பதை ஸாதுவாக்க அஷ்டமூர்த்தியாலுமாகாது. தேசிகன் தமது தமிழ்ப் பிரபந்தங்களில் உத்தரவேதியென்னுஞ் சொல்லைப் பலகால் பிரயோகித்துளர். அருளிச் செய லிலும் இது காணப்படுகிறது. உத்திரவேதியென்று எங்குமில்லை. இதைப்பற்றி இன்னமும் விரிவாகவெழுத லஜ்ஜிக்கிறோம். 'ப்ரதமகபளே மக்ஷிகாபாத:' என்று சொல்லி முடிப்போமிதை.

## — திருப்ரதிஷ்டைக்கும் ஸம்ப்ரோக்ஷணத்திற்கும் வாசியறியாமை. —

7. திருக்குடந்தை தேசிகனென்கிற மஹானைப்பற்றி யெழுதிக்கொண்டுபோகையில் (முகவுரை பக்கம் 2ல்) "ஒருகால் ஸ்ரீமதபர்யாப்தாம்ருதனுக்கு நைமித்திகமான திருப்ரதிஷ்டை செய்யும்படி நேர்ந்தகாலத்தில்" என்றெழுதப்பட்டுள்ளது. இது, திருப்ரதிஷ்டைக்கும் ஸம்ப்ரோக்ஷணத்திற்கும் வாசியறியாமையினாலாயது. முதன்முதலாகச் செய்வது திருப்ர திஷ்டை; பிறகு நைமித்திகமாகச் செய்யப்படுவது ஸம்ப்ரோக்ஷணம். திருப்ரதிஷ்டைக்கு ஸக்ருத்கரணமேயொழிய நிமித்தவசாத் புந:கரணமோ புந:புந:கரணமோ கிடையாது. ஆகவே இங்கு 'நைமித்திகமான திருப்ரதிஷ்டை செய்யும்படி நேர்ந்ததாக' எழுதியிருப்பது ஏலாது.

### — முகவுரைகாரர் க்ராந்திகசைலி யறியாதவரென்பது. —

8. அடுத்தாப்போல் "ஸ்ரீ தூப்புல்பிள்ளை யென்கிற ஸ்ரீ நிகமாந்தமஹாதேசிகர்" என்றுள்ளது. தமிழ்ச் சொல்லோடு ஸ்ரீ சப்தத்தைச் சேர்ப்பது விரஸம். ஸ்ரீ பொய்கையார், ஸ்ரீ பேயார், ஸ்ரீ உய்யக்கொண்டார், ஸ்ரீ மணக்கால்நம்பி, ஸ்ரீ யாளவந்தார், ஸ்ரீ மணவாள மாமுனிகள் என்றிப்படி நவீநர்கள் எழுதத் தொடங்கினார்கள். பூர்வாசார்ய க்ரந்தங்களில் அவ் இதை ஏற்றியிருக்கின்றார்கள். இதை சிக்ஷிக்கவந்தோமல்லோமிங்கு. ஸ்ரீநிகமாந்தமஹாதேசிகனென்று எழுதினாலே போதுமானது. அல்லது தூப்புல்பிள்ளை யென்றெழுதினாலே போதுமானது. "தூப்புல்பிள்ளை யென்கிற ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகர்" என்றெழுதுவது புது வைஷ்ணவம் கொண்டாடுகிறபடியைக் காட்டுகின்றது. குறிப்பிட்ட இரண்டு திருநாமங்களில் எது ப்ரஸித்தம்? எது அப்ரஸித்தம்? என்று கேட்கவேண்டிற்றாகும். கேட்டால் விடைதர இயலாது. ஸம்ப்ரதாய க்ரந்தங்களில் பரிசயமில்லாதவர் எழுதினது இது என்பதை ஸ்தாபிக்க இத்தகைய விஷயங்கள் பலபல. கண்ணபிரான் திருவாய்ப்பாடியிலிருந்து மதுரைக்கு எழுந்தருளினபின் நடந்த கதைகளை உபந்யஸிக்கிற வொருவர் "மதுரை வீதியிலே ரஜகன் ரஜகனென்கிற வொருவண்ணான் வந்துகொண்டிருந்தான்; அவனுடைய முதுகில் வஸ்த்ரம் வஸ்த்ரம் என்கிற துணிகளின் மூட்டை யிருந்தது" என்று சொல்லிக் கொண்டிருந்தார். அதுவே நமக்கு நினைவுக்கு வருகின்றது.

### பக்தியின் பரிவாஹத்தாலென்றதன் அஸாமஞ்ஜஸ்யம்.

9. மேலெடுத்த வாக்யத்திலேயே "ஸ்ரீ தேசிகன் விஷயத்திலுள்ள அத்யந்த பக்தியின் பரிவாஹத்தால்" தேசிகனை ஸ்தோத்ரம் செய்ததாக எழுதப்படுகிறது. இங்கு 'பரிவாஹத்தால்' என்பது அஸாஞ்ஜஸப்ரயோகம். மாரீசன் ம்ருகமாகவந்தானென்ன வேண்டுமிடத்து ம்ருகத்தாலே வந்தானென்பது எப்படி அஸமஞ்ஜஸமோ அப்படியே இதுவும். பக்தியின் பரிவாஹரூபமாக ஸ்தோத்ரம் அவதரிக்குமே யொழியப் பரிவாஹத்தால் அவதரியாது. பரிவாஹ சப்தார்த்தம் இனனதென்று தெரிந்து கொள்ளுகிற வரையில் இதில் தெளிவு பிறவாது. ஸ்தோத்ர ரத்நத்தில் "அபரிமிதாச்யுத பக்திதத்வஜ்ஞாநாம்ருதாப்தி பரிவாஹ சுபை: வசோபி:" என்றவிடத்து தேசிகனுடைய பாஷ்யம் ஸேவிப்பது. "பரிவாஹ:—தடாகாதி ரக்ஷணார்த்தம் அதிகஜலாபகமநப்ரவாஹ:; தத்வத் சுபை:" என்பது பாஷ்ய ஸூக்தி. "பூரோத்பீடே தடாகஸ்ய பரீவாஹ: ப்ரதிக்ரியா" [உத்தரராமசரிதே] என்றான் பவபூதி; ஆக, அத்யந்த பக்தியின் பரிவாஹமாக (அல்லது) பரிவாஹ ரூபமாக ஸ்தோத்ரம் அவதரித்ததென்ன வேணுமே யொழிய 'பரிவாஹத்தால் அவதரித்தது' என்னத்தகாது.

### — தேசிகன் 120-வது திருநக்ஷத்ரத்தில் பரமபதித்தாரென்றதுபற்றி. —

10. இத்தகைய அவத்யங்களை நம்முடைய அந்தேவாஸிகள் எடுத்துக்காட்டக்கடவர்கள். நமக்கிது பணியன்று. முக்கியமாக ஒரு விஷயம் கேண்மின். (பக்கம் 4ல்) தேசிகன் சுக்ல வருஷத்தில் அவதரித்தார் என்றெழுதி உடனே (சிலர் விபவஸூ அவதாரம் என்பார்கள்) என்றெழுதிவைத்தார். அநிர்ணீதமாகவே எல்லாரும் எழுதிவருகிறரீதியில் இவரும் எழுதினாரென்பதில் வியப்பொன்றுமில்லை. மேலே அவதார ஸமாப்தியை யெழுதுமிடத்தில் (பக்கம் 17ல்) "120-வது திருநக்ஷத்ரத்தில் திருநாட்டுக் கெழுந்தருளினார்" என்றெழுதி வைத்தார். அவதார வருஷத்திற்கு நூற்றிருபதாவது வருடம் எதுவாக வேணுமென்பதை

த்ஸரும் எளிதாகத் தெரிந்து கொள்ளமுடியும். இரண்டறுபது கூடினால், நூற்றிருப திநந்து. ப்ரபவாதி ஸம்வத்ஸரங்கள் அறுபதேயொழிய ஏற்றத்தாழ்வில்லையேயிதில். ப்ரபவாதீநாம் ஷஷ்ட்யாஸ் ஸம்வத்ஸராணும் மத்யே" என்பதில் விவாதமில்லையே.° இப் போது இவரால் அச்சிடப்பட்டிருக்கிற தேசிக ஸஹஸ்ரநாமாவளியில் முடிவான திருநாமம் (1008) "ஸௌம்ய கார்த்திக ராகா ஸ்ரீ பர்யங்கா ரோஹணப்ரிய:" என்பது. இத்தோடு த்தம் ஸமாப்தம். ஸௌம்யவருஷ கார்த்திகைப் பௌர்ணமியன்று தேசிகன் திருநாட்டுக் கெழுந்தருளினதாக இதில் தெரிவிக்கப்படுகிறது. இதில் மட்டுமன்று; உலகமெல்லாம் ஸந்தேஹ விபர்யயமாக இங்ஙனமே சொல்லிவருகிறது. இது பல நூல்களில் ஏறியு ள்ளது. அவதாரம் விபவ வருஷத்திலா? சுக்ல வருஷத்திலா? என்கிற ஸந்தேஹத்தை ர்கள் விளைக் கிளப்பி நின்றார்களே யொழிய அவதாரஸமாப்தி வருஷத்தில் இன்றள ஒரு நாட்டிலும் ஒரு மூலையிலும் ஒருவரும் விவாதப்படக் கண்டதில்லை, கேட்டதில்லை. க்ல வருஷத்திற்கோ விபவ வருஷத்திற்கோ ஸௌம்ய ஸம்வத்ஸரமானது நூற்றிருபதாவ தாக எப்படிநேர்படுமோ அறிகின்றிலோம். எதிலும் விபரீத க்ரஹணமே வடிவெடுத்திருக்கு கிறார்கள், எழுதுகிறபணியில் கைவைக்காமல் காதில் விழுந்ததும் விழாததுமாய்ப் பேசிப் போது போக்குவது நலமென்று நாம் ஹிதைஷியா தெரிவிக்கிறபடி.

## அஸிநா தத்த்வமஸிநா ச்லோகார்த்த விவரணம்.

11. அக்ஷோப்ய முனிக்கும் வித்யாரண்யர்க்கும் மதவிஷயமாக விவாதம் ஏற்பட்ட தையை (பக்கம் 10ல்) எழுதி இங்கு மத்யஸ்தராகக் கோரப்பட்ட ஸ்வாமி தேசிகன் *அஸிநா தத்த்வமஸிநா பரஜீவப்ரபேதிநா, வித்யாரண்ய மஹாரண்யம் அக்ஷோப்யமுநிரச்சிநத்.* என்கிற ச்லோகத்தையெழுதி யனுப்ப, வித்யாரண்யர் மிகவும் கோபமடைந்து சததூஷணியை யனுப்பினால் அதைத் தூஷிக்கிறேனென்று ஸ்வாமிக்குச் சொல்லியனுப்பினதாகவும், அப்படியே ஸ்வாமியனுப்பின ஸ்ரீ கோசத்தை ஆதியோடந்தமாகப் பார்த்து ஓரிடத்தில் க்ஷரத்தின்மேல் ஒரு குத்துக் குத்தியனுப்பினதாகவும்......... கதை யெழுதியுள்ளார். இங்கு மகம் தெளியப் பரமார்த்த முணர்த்துகிறோம். * அஸிநா தத்த்வமஸிநா * என்கிற ச்லோகம் ஜயநகரத் தாசனுக்குக் கிடைத்தபோது வித்யாரண்யர் இந்த ச்லோகத்தின்படி தமக்கே வெற்றியென்று பறைசாற்றினர். அந்த ச்லோகத்திற்கு அவர் உபந்யஸித்த அர்த்தமாவது— வித்யாரண்யராகிற மஹாரண்யத்தை அக்ஷோப்யமுநி கண்டித்து விட்டார் என்று இப்போது ம் சொல்லிவருகிறபடியன்று; வித்யாரண்ய! என்று தனிப்பதமாகப் பிரித்து விளியாக்கி றே வித்யாரண்ய!—வாரீர் வித்யாரண்யரே!, அக்ஷோப்ய முனியானவர், மஹாரண்யம்— ப்ருஹதாரண்யகோபநிஷத்தை, அச்சிநத்—நாசமாக்கிவிட்டார்; அக்ஷோப்யமுனியின் வாதம் ப்ருஹதாரண்யக விருத்தம்—என்று * அஸிநேத்யாதி ச்லோகத்தினால் ஸ்வாமி தெரிவித்ததாக த்யாரண்யர் உரைசெய்து தமது வெற்றியையே அபிநயித்தார். இதனால் அவர் கோபம் கொண்டதாகவும், 'உம்முடைய சததூஷணியை யனுப்பும், அதைக் கண்டிக்கிறேன்' என்று தெரிவித்ததாகவும் சொல்லுவது மிகத்தவறு. முக்கியமாக, அந்த ஸந்தர்ப்பத்தில் சததூஷணி அவதரித்திருக்கவுமில்லை. இதற்கு ப்ரமாணம் கேண்மின்; ஆசார்ய சம்புவில் ஐந்தாவது ஸ்தபகத்தில் இந்த மாத்யஸ்த்ய விஷயம் விளக்கப்பட்டது; அதன்பிறகு ஸ்வாமி வெகுகாலம் திருவஹீந்த்ரபுரத்தில் எழுந்தருளியிருந்து பிறகு ஸ்ரீரங்கம் சேர்ந்து அங்கே சததூஷணியை அருளிச்செய்ததாக (அந்த சம்புவில்) ஆறாவது ஸ்தபகத்தில் விளக்கப்பட்டுள்ளது. ஆக, 'அஸிநா தத்த்வமஸிநா ச்லோகமவதரித்த காலத்தில் சததூஷணீக்ரந்தமே ப்ராதுர்ப்பவியாமை

யாலே இவரெழுதியுள்ள வரலாறு ஸ்வகபோல கல்பிதமென்று அறுதியிடக்குறையில்லை. தேசிகனைப்பற்றி இவர்கள் எழுதுவது ஒவ்வொன்றும் விபரீதமும் அஸத்யமுமேயாகும்.

## — நவீனர்கள் சொல்லும் கதைகளெல்லாம் நிராதாரமென்பதுபற்றி. —

12. 'தேசிக ஸம்பந்தத்தை இடைக்காலத்தில் ஏறிட்டுக் கொண்டவர்கள் இவர்கள்' என்பதை நாம் பல நூல்களில் அசைக்க முடியாதபடி அறுதியிட்டிருக்கிறோமென்பதை உலகமுழுது முணரும். ஆழ்வாராசாரியர்களின் சரித்திரங்களையோ தேசிகன் சரித்திரத்தையோ இவர்கள் எந்த நூலைக்கொண்டு தெரிந்து கொண்டார்கள்? என்று விசாரிக்குமளவில் ஒரு நூலையும் காட்ட யோக்யதை யில்லாமலன்றோ இருக்கின்றது. திரோஹிதர்களான சேட்லூர் நரஸிம்ஹாசார்ய ப்ரப்ருதிகள் ப்ராசீனமான சரித்திர நூல் தங்களுக்கு எதுவுமே கிடையாதென்பதைச் சிலாசாலனம் செய்துபோயிருக்கிறார்கள். [இது பலகால் ப்ரபஞ்சிதம்.] ப்ரக்ஷேப சங்கைக்கு அநாஸ்பதமாய் விளங்குவதும் ப்ராமாணிக பண்டிதோத்தம ப்ரணீதமும் மஹாப்ரௌடமுமான ஆசார்யசம்பு இவர்களுக்கு விஷமாகவன்றோ ஆய்விட்டது. அதிலுள்ள கதைகளுக்கு விபரீதமான வரலாறுகளையும், அதில் ஈஷத்தும் தொடப்படாத கதைகளையுமே சொல்லுவதும் எழுதுவதுமான இவர்களின் ப்ராமாணிகத்வத்தை இவர்களின் உள்ளமே உணரக்கடவது.

## —— நவீனர்களெழுதும் சரித்திரத்தினால் தேசிகனுக்கு லாகவமே ஸித்திக்குமென்பது. ——

13. தேசிகனுடைய விபவகாலத்தில் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் அவரிடத்தில் பொறாமை கொண்டிருந்தார்களென்றும், பாதரக்ஷையைக் கட்டி தேசிகன் திருமுடியிலே படும்படி தொங்கவிட்டார்களென்றும், ச்ராத்தத்தில் நிமந்த்ரணத்திற்கு ஒப்புக்கொண்டிருந்தவர்கள் வஞ்சித்து விட்டார்களென்றும், திருமாளிகையிலெழுந்தருளியிருந்த தேசிகன் க்ரந்தாவலோகநம் செய்துகொண்டிருக்கையில் திருவடிகளைப் பிடித்திழுத்துத் தெருவிலே விழவிட்டார்களென்றும் இங்ஙனே பலவாறு நவீனர்கள் எழுதியுள்ள கர்ணாருந்துத சரித்திரங்கள் ஆசார்ய சம்புவில் அடியோடு தலைகாட்டாதவை; பிறர்மீது அவத்யமேற்டுவதற்காகவே நிராதாரமாகக் கல்பிக்கப்பட்டவை. இவற்றால் தேசிகனுக்கும் அப்ரதிஷ்டையே யாகிறதென்பதை யறியகில்லாமல் எழுதிவைக்கப்பட்டவை இவை. இத்தகைய ஹேய கதைகளையே ப்ராக்ருத புஸ்தகமும் பரவச் செய்கின்றதந்தோ!. * ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாம் அபவந் கதா: * என்றாப் போலே * வெஹாஞ ஸஞுமிநிஃமஉாஞ ஸஞுமிஷூ யூஞ ஸஞுமிஃ கவிதாகிஃகெஜ்ரஃ। ஜ தெருவ ஸவஃதூ ஸவெஜவ ஸவெஃ ஜநா ஸஉஹாகூ கயயஞ சூஸநு. * என்று ச்லோகமியற்றிக் கூறவேண்டியிருக்க, (அதாவது) உலகமெல்லாம் தம்மையே வாய் வெருவும்படியாகத் தமது திருக்குணங்களாலே எல்லாரையும் ஈடுபடுத்திக் கொண்டு எழுந்தருளியிருந்தாரென்று உள்ளபடி பெருமைகளை ப்ரசாரம் செய்யவேண்டியிருக்க, அது செய்யாதே ஸபக்ஷர்களும் விபக்ஷர்களுமான எல்லார்க்கும் வித்வேஷ பாத்ரபூதராயிருந்துவந்தாரென்று ப்ரசாரம் செய்வதனால் ஸ்வாமிக்கு லாகவமன்றோ உண்டாகிறதென்பதைச் சிறிது மறியகில்லாதே வைபவமெழுதுவதாகப் பெயரிட்டு லாகவமயமாக எழுதிவைப்பவர்களைப் பற்றிச் சோகிக்கவேண்டியதத்தனை.

## ச்ராத்தவஞ்சனைக்கதையின் ஹேயத்வ நிரூபணம்.

14. ச்ராத்தத்தில் நிமந்த்ரணத்திற்கு வரிக்கப்படுமவர்கள் ஆப்தர்களும் இஷ்டபந்துக்களுமாயிருப்பர்களே தவிர வழிப்போக்கர்களா யிருக்க மாட்டார்களே; இதிலென்ன ஸம்சயம்? அப்படிப்பட்ட மஹான்கள் நிமந்த்ரணத்திற்கு இசைந்திருந்து, சில அஸூயுக்களால் கலக்கப்பட்டு ஸமயத்தில் வாராதே வஞ்சித்துவிட்டார்களென்று கதையெழுதினல் இது மஹாவைபவநிதியான தேசிகன் விஷயத்திலே பொருந்துமாவென்று இதுகூட ஆராயவில்லையே. அஸூயுக்களின் கலஹவார்த்தைக்கிணங்கி ஒருவர் வஞ்சித்துவிட்டாலும் மூவருமே வஞ்சித்துவிட்டார்களென்று கதையெழுத விவேகிகளுக்குக் கைவருமா? இத்தகைய கதை ப்ராமாணிகமான வொரு மூலநூலில் இருந்தாலாவது எழுதிப்போரலாம். அப்பயதீக்ஷிதருடைய சரித்திரத்தில் இக்கதையை எழுதிவைத்திருப்பது காண்கிறோம். அதை யாரோவொரு அவிவேகி தேசிகசரித்திரத்தில் புகவைத்தார்; இதனல் தேசிகனுக்கு அப்ரமேயமான ப்ரபாவம் ஸித்தித்துவிடுமென்று மயங்கி இதை ஒருவர்மாற்றி ஒருவராக எழுதிவைத்துப் பரிஹாஸ்யராகின்றார்கள். பல வகைகளிலும் க்ஷாத்ரம் முற்றிவருமிக்காலத்திலும் ச்ராத்தத்தைக் கெடுத்துப் பரிபவம் விளைக்கவேணுமென்னுங் கடுநெஞ்சு ஒருவர்க்கு முண்டாவதாகத் தெரியவரவில்லை. நல்லடிக்காலமென்று கொண்டாடப்படுகிற அக்காலத்தில் இத்தகைய கொடுந்தொழில்களை ஸ்ரீவைஷ்ணவர்கள் தாம் செய்யத் தலைப்பட்டார்களென்று எழுதிவைப்பது சில பாமரர்களுக்கே தகுமத்தனை. முகவுரையைப்பற்றின விமர்சத்தை இப்போது இவ்வளவிலே நிறுத்தி அடுத்த பகுதியை விமர்சிக்கப் புகுவோம்.

## அஷ்டோத்தரசதநாமஸ்துதியின் வரலாறுரைத்தல்.

15. ஸ்ரீதேசிக ஸஹஸ்ரநாமாவளிக்கு முன்னே அஷ்டோத்தரசத நாமாவளியொன்று அச்சிட்டிருக்கிறார்கள். இதற்கு நாமாஷ்டோத்தர சத நாமாவளி யென்று பெயராம். இதன் பொருளை விமர்சிப்பது நிற்க. இந்த ஸ்துதியைப்பற்றி இப்புத்தகத்தில் ஓரக்ஷரமும் எழுதப்பட்டிருக்கவில்லை. இது எக்காலத்தில் யாராலியற்றப்பட்டதென்பதுபற்றி இதில் ப்ரஸ்தாவலேசமுமில்லை. இதைப்பற்றின சரித்திரத்தை நாம் உள்ளபடியறிவோமாதலால் அதை இங்குத் தெரிவிக்கிறோம். முப்பது நாற்பதாண்டுகட்கு முன்பு தாதாசார்ய வம்சஸ்தர்கள் தூப்புல் தேசிகனுக்கு நாங்களே ஆராதனம் செய்யும் மிராசுடையோ ரென்று நீதிமன்றத்தில் முறையிட்டு அப்போது இரண்டொரு வருஷகாலம் [தாத்காலிகமாக] தேசிகனுக்கு ஆராதனம் செய்து வந்தார்கள். திவங்கதரான ஸ்ரீ. அய்யா. ஸ்ரீக்ருஷ்ணதாதாசார்யர் ஆராதனம் நடத்திவருகையில் சென்னையிலிருந்து ஒரு மஹநீயர்வந்து விளக்கொளி யெம்பெருமானுக்கு அர்ச்சனை நடத்திவைத்து உடனே தேசிகனுக்கும் அர்ச்சனை நடத்தும்படி வேண்ட, பெருமாளுடைய நாமாவளிகளையே பரிசாரகர் சொல்லிவர இவர் அர்ச்சனை செய்திட்டார். இப்படி செய்வது தகுமா? என்று அந்த மஹநீயர்கேட்க, 'இங்கு இப்படித்தான் ஸம்ப்ரதாயம்; ஸ்ரீவேங்கடேசாவதாரோயம் தத்கண்டாம் ஸோதவா பவேத்* என்றிருக்கிறபடியாலே தேசிகன் ஸாக்ஷாத் வேங்கடேசனகவே கொள்ளப்பட்டு வெகுகாலமாகவே இப்படித்தான் ஆசாரம் வந்திருக்கிறது' என்று சொன்னர். இதுகேட்ட அந்த மஹநீயர் மஹாவிவேகியாகையாலே மிகவும் சினந்து கண்டித்துச் சென்றார். அதனல் நிர்வேதங்கொண்ட அய்யா தாதாசார்யர் அப்போது இக்கச்சி மாநகரில் ஒரு [illegible]கலாசாலையில் ஸம்ஸ்க்ருதோபாத்யாயராக இருந்த மன்[illegible]. கல்யாணஸாமி ஐயங்காரென்பவர் அக்கிலிபிக்கிலியாகக் கவனம்

செய்து கொண்டிருந்தபடியாலே அவரைக்கொண்டு இந்த அஷ்டோத்தரசத நாமாவளியைச் செய்வித்துப் பெற்று அர்ச்சனையில் உபயோகித்து வந்தார். அதுவே இப்போது அச்சாகி வெளிவந்தது. இது ஸாக்ஷாத்ஸ்வாமி ஸாதித்த தென்றோ, பரோக்ஷஸ்வாமி பணித்த தென்றோ எழுதி வெளியிட்டிருக்கலாம். ஸ்வயம்வ்யக்தமென்று நினைத்துக் கொள்ளட்டு மெனக் கருதி இதற்கு ஒரு ப்ரவரமுமில்லாமே முத்ரணம் செய்து விட்டார்கள்.

## — அஷ்டோத்தரத்தின் அஸாமஞ்ஜஸ்ய நிரூபணம். —

16. இதிலுள்ள விபர்யயத்தைச் சுருக்கமாகத் தெரிவிப்போம். நாமாவளிகளை ரசனை செய்பவர்கள் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் போலே ச்லோக ரூபமாகச் செய்வது வழக்கம். ச்லோகங்களிலிருந்து பிறகு நாமங்களைத் திரட்டிக் கொள்வர்கள். ப்ரக்ருத ஸ்துதியும் அங்ஙனமே ச்லோக ரூபமாகத் தான் செய்யப்பட்டது. சதுர்த்தீநமஸ்ஸுக்களைத் தள்ளி ப்ரதமாந்தமாக வைத்து வாசித்துப் பார்த்தால் பலவிடங்களில் [illegible] ஸ்பஷ்டமாகக் காணலாகும். [illegible]களைக் கூட்டினுலுங்கூட ச்லோகம் கூடாதபடியே யிருக்கும். இதுபற்றியே கவியை அக்கிலி பிக்கிலி யென்று நாம் குறிப்பிட்டது. நாம் இதை ஒரு பொருளாக்கி இதில் குற்றங் குறைகளை விவரிக்க மிக வெட்கப்படுகிறோம். இதை முத்ரணம் செய்வித்தவருடைய மருளை ஒரே ஒரு விஷயங்கொண்டு நிரூபித்துவிட்டு மேலே போவோம்.

## — அஷ்டோத்தரத்தில் தலையான வொரு பிறழ்வு காட்டுதல். —

17. இதில் எண்பத்தாறுவது நாமம் முதல் "[illegible] உபகர்த்தா" என்பது ச்லோகம். அதன் பிறகு 'ஸத்ஸம்ப்ரதாயாய நம:, ஸ்திரயே நம:' என்று இவர்கள் அச்சிட்டிருக்கிறார்கள். இங்கு மருமமென்ன வென்றால் உபகர்த்தா என்ற நாமத்திற்குமேல் மஹாமதி: என்றோ மஹாபடு: என்றோ ஒரு நாமம் படிக்கப் பட்டிருந்தது. அதன் பிறகு 'ஸத்ஸம்ப்ரதாயஸ்திரதீ:' என்று ஒரே நாமமாக இயற்றப் பட்டிருந்தது. ஒரு நாமமிருந்து ப்ரஷ்டமாயிற்றென்பதை அறியகில்லாதவிவர்கள் நாமங் களை எண்ணிப்பார்த்தபோது ஒரு நாமம் குறைபடுகின்றதேயென்று திகைத்து ஸத்ஸம்ப்ரதாய ஸ்திரதீ: என்கிற ஸமஸ்தமான ஒரு திருநாமத்தை வ்யஸ்தமாக்கி [இரண்டு நாமமாக்கி] (ஸத்ஸம்ப்ரதாயாய நம:, ஸ்திரதியே நம:) என்று பதிப்பித்துவிட்டார்கள். ஸத்ஸம்ப்ரதாய: என்று ஸ்வாமிக்கு ஒரு திருநாமமிருக்குமா வென்று இதையும் ஆலோசிக்கமாட்டிற்றில ரந்தோ. ந்யாஸ விம்சதியில் ஆசார்ய லக்ஷண ச்லோகத்தில் "ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே" என்று ஸ்வாமி ஸாதித்திருக்கிறுரேயல்லது வேருக இல்லை. ஸந் ஸம்ப்ரதாயோ யஸ்ய ஸ: — ஸத்ஸம்ப்ரதாய: என்று கொள்ளக் குறையுண்டோ? என்பர்கள். என்ன குறை! ஒரு குறையுமில்லை. உபகர்த்தா என்கிற திருநாமத்திற்குமேல் நாலெழுத்து குறைபடுவதற்கு ([illegible]) என்று போட்டுவிட்டால் அக்குறையும் தீர்ந்துவிடும். 'உபகர்த்தா [illegible]' என்று ச்லோகம் படிக்கவேண்டும் போலும். இவர்களுடைய ஸம்ப்ர தாயத்தில் வித்வான்களுக்கு ஊஹசக்தியில்லையே. [illegible]ரான வொரு சிறந்த வித்வானுக்குக் காண்பித்துக் குற்றங்குறைகளைக் களைவித்து வெளியிட்டிருக்கலாகாதா! வீணாக எவ்வளவு பணச் செலவு? ஸ்தாலீபுலாகந்யாயத்தால் இது காட்டினோமென்க.

### ப்ரக்ருத ஸஹஸ்ரநாமத்தின் அஸமஞ்ஜஸத்வப்ரதிஜ்ஞை.

18. இனி ஸஹஸ்ரநாமாவளி விமர்சத்திலிறங்குவோம். இந்த ஸ்துதி ஸ்வாமிதேசிக னுடைய வைபவபரமான தென்று சொல்லப்படுதலால் ப்ரதிபாத்ய வைலக்ஷண்யம் குறை வற்றதே. இதற்கு வக்தா திருக்குடந்தை கோபாலதேசிகன் என்று இவர்கள் அச்சிட்டிருக் கிறபடி வஸ்துஸ்திதியில் அந்த மஹானே வக்தாவாகில் வக்த்ரு வைலக்ஷண்யமும் குறை வற்றதேயென்று கொள்ளத் தடையில்லை. அந்த கோபாலார்ய மஹா தேசிகனைப் பெரிய ஸர்வதந்த்ரஜ்ஞரென்று இவர்கள் கொண்டாடுவதால் அவரை இந்த ஸ்துதிக்கு வக்தாவாகக் கொள்ளுவதற்கு ஔசித்யலவ லேசமும் கிடையாது. இங்கு யாம் திண்ணமாகக் கூறுவது கேளீர்; ஸ்ரீ கோபாலார்ய மஹா தேசிகனை இந்த ஸஹஸ்ரநாமத்திற்கு வக்தாவாகக் கொள்ள வேண்டியது அவசியமானால் அவரை ஒரு ஸாமாந்ய பண்டிதராகக் கொள்ளவேண்டுமே யொழிய அபரதேசிக னென்று கொள்ளுவதற்கு அவகாச லேசமும் கிடையாது. அவரை அபரதேசிகனாகவே கொள்ள வேண்டில் இந்த ஸ்துதிக்கும் அவர்க்கும் ஸம்பந்த கந்தமும் கொள்ளத்தகாது. நாம் ஒரு விஷயத்தைச் சொன்னால் அது ஹேது பௌஷ்கல்யத்தாலும் யுக்திபுஷ்டியாலும் மற்றும் பல ஸாமக்ரிகளாலும் ஸுஹ்ருத்மாகவேயிருக்கு மென்பது உலக ப்ரஸித்தமாதலால் நம்முடைய ப்ரதிஜ்ஞாமாத்ரமே பர்யாப்த மென்னத் தகும். ஆனாலும் நாம் இதிலும் ப்ரதிஜ்ஞாமாத்ரத்தோடு நிற்பதில்லை. அல்ப ஸ்வல்ப ஹேதுக்களைச் சொல்லி நிற்பது மில்லை. ப்ரக்ருத விஷயத்திலும் அபரிமித ஹேதுக்களை விவரிப்போம்.

### ப்ரக்ருத ஸஹஸ்ரநாமஸ்துதியின் வெறுக்கத்தக்க நிலைமை.

19. ஸ்வாமி தேசிகனுக்கு நாமாவளிகள் அமைய வேணுமானால் ஆயிரமென்ன! பலகோடி நூறாயிரம் திருநாமங்களை அவலீலையாக அமைக்கலாகாதா? ஸ்வாமி களிலே ஜ்ஞானத்திற் குறையா? பக்தியிற் குறையா? விரக்தியிற் குறையா? எதிலும் குறையில்லையே. அப்படிப்பட்ட ஸ்வாமியைத் துதிக்க வித்யாநிதியான வொருவர் இழிந்தால் மொழிகள் 'என்னைக் கொள் என்னைக் கொள்' என்று அஹமஹமிகயா வந்து நிற்குமே. இந்த ஸஹஸ்ரநாமஸ்துதியை வாசித்தபோது, 'தேசிகனுக்கு இப்படியும் ஒரு அவஜ்ஞை நேர வேணுமோ?' என்கிற நிர்வேதமே நமக்கு மிகமிகவுண்டாயது. தேசிகதர்சநஸ்த ரென்று இவர்கள் நவீனமாக வழங்க நின்ற வொரு வகுப்பிலே எத்தனை வித்வந்மணிகளில்லை, எத்தனை கவிச்ரேஷ்டர்களில்லை. அன்னவர்களில் ஒருவரைக் கொண்டு இதைச் செய்விக்க லாகாதா? வித்வான்களாயுள்ளவர்கள் இந்த ஸ்துதியை வாசித்துப் பார்த்திரார்களா? பார்த்தும் ஹாஹாகாரம் செய்யாமல் வாளாவிருக்கின்றார்களென்றால் அந்தோ! இதற்கு நாம் என்ன சொல்லுவது! உலகில் விஸ்மயநீயமோ சோசநீயமோ இதிற்காட்டிலும் வேறில்லையே.

### காளிதாஸ தச ஸஹஸ்ரநாம ப்ரபாவம்

20. காளிதாஸ மஹாகவியிடத்தில பரமப்ரேமமுடைய வொரு ஜமீன்தாரி தன்னிடம் வருகிற பண்டிதர்களை நோக்கி 'காளிதாஸர் விஷயமாக வொரு ஸஹஸ்ரநாம ஸ்துதி செய்து கொடுத்தால் பெரிய ஜாகீர் தருகிறேன்' என்று சொல்லிக் கொண்டிருந்தானாம். பத்தெட்டு நாமங்களுக்குமேல் ஒரு வித்வானாலும் எழுத முடியாமற் போயிற்றாம். அந்த ப்ரபு 'ஸஹஸ்ர நாமம் வேண்டாம்; சதநாமமாவது எழுதிக் கொடுங்கள்' என்றானாம். அதற்கும் விஷய மில்லையே யென்று பலர் சொல்லிப் போய்விட்டார்களாம். இப்படி யிருக்கையில் ஒரு

ஸாமாந்யகவி வந்து தான் காளிதாஸர் விஷயமாகப் பதினாயிரம் நாமாவளிகள் எழுதித் தருவதாக உறுதி கூறி ஒரே நாளில் அங்ஙனமே யெழுதிக் கொடுத்து மிகச் சிறந்த பரிசு பெற்றுப் போனானாம். அந்த நூலுக்குக் 'காளிதாஸ தசஸஹஸ்ரநாமாவளீ' என்று பெயர்; அது அச்சிடப்பட்டுமிருக்கிறது. முழுதும் ச்லோகமயம். சில ச்லோகங்கள் கேண்மின்;

1. [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

371. [illegible]
[illegible]
[illegible]
[illegible]

716. [illegible]
[illegible]
[illegible]
[illegible]

1007. [illegible]
[illegible]
[illegible]
[illegible]

10000. [illegible]

இப்படிப்பட்ட ச்லோகங்களை ஓரிரவிலியற்றி இவற்றில் பதினாயிரம் நாமங்களைப் புகுத்தி வாசித்துக்காட்டி ஜமீன்தாரியை ஆச்சர்ய ஆனந்த ஸாகரத்தில் ஆழங்காற்படுத்தி அபரிமித க்ராம பூமிகளையும் பெற்றுப் போனான் பண்டிதன். ஸத்யமாகச் சொல்லுகிறோம்; இந்த தேசிக ஸஹஸ்ரநாமாவளியை வாசிக்கும் போது மேலே காட்டின தசஸஹஸ்ரநாமாவளியே நமக்கு நினைவுக்கு வந்தது. ஆனால் அந்த நாமாவளியில் ஒருவரால் ஒரு சப்த தோஷமும்

...முடியாது; ஸரணியில் அதையே யொத்ததான இந்த ஸஹஸ்ர நாமத்திலோ வென் ... கவிதைகளில் எத்தனை விதமான குற்றங் குறைகள் கூற நேருமோ அத்தனையும் ...களைகள். விரிவுக்கு அஞ்சாமல் அத்தனையும் காட்டலாம்; ஆனால் எந்த தெய்வத்துக்கு ... ஆனாலும் பல பல காட்டுகிறோம். ஐயோ! இப்படியும் ஒரு நூலுண்டோ?

— முதல் ச்லோகமே அபத்தக்களஞ்சியமென்று நிரூபித்தல் —

21. இந்த ஸஹஸ்ர நாமத்தில் முதல் ச்லோகம்:

வெஂகடேஶக்ருபாலப்தநந்தார்யஸ்வப்நவீக்ஷித: ।
தோதாராம்பாகர்பஸிந்துஸுதாகரஸமப்ரப: ॥

...இதில் பூர்வார்த்தத்திற்கு என்ன பொருள்? தேசிகன் திருத்தகப்பனான ...நந்தாசார்ய ஸ்வாமிக்குத் திருவேங்கடமுடையான் க்ருபையினால் ஒரு கனவு கிடைத்த ...தும் அக்கனவில் தேசிகன் சிந்திக்கப்பட்டாரென்றும் இங்கு வக்தாவுக்கு விவக்ஷை. ...சனை இதற்குப் பொருந்தியுள்ளதா வென்று பார்க்கவேணும். வெஂகடேஶக்ருபா ...லப்தாவேன ஸ நந்தார்யஸ்வப்ந: — வெஂகடேஶக்ருபாலப்தநந்தார்யஸ்வப்ந:; ...வீக்ஷித:. என்று விக்ரஹிக்க வேணும். அனந்தாசார்யராலே ஸ்வப்நம் ...ற்றென்று இதில் ஶப்தமர்யாதயா தெரிந்து கொள்ளவே முடியாது. சிந்தனைக்குக் ...ர்த்தா அனந்தாசார்யர் என்பதும் இதில் தெரிந்துகொள்ளமுடியாது. வெஂகடேஶ ...க்ருபாலப்தஸ்வப்நநந்தார்யவீக்ஷித: என்று வாக்ய ஸரணியை நெஞ்சிலே யிட்டுப் ...ருங்கள். இந்த வாக்ஸந்நிவேசத்தில் கனக்கண்டவர் அனந்தாசார்யரே யென்பதும் ...ஸிகவிஷயக விஜ்ஞாநகர்த்தாவும் அவரே யென்பதும எவ்வளவு எளிதாகத் தேறுகிற ...ன்று பாருங்கள். "வேங்கடேச க்ருபாலப்தாநந்தார்ய ஸ்வப்நசிந்தித:" என்று இப்போ ...ருக்கிற வாக்ஸந்நிவேசத்தில் இப்பொருள் தேருதோ வென்று அபிநிவேசஶூந்ய ...ர்கள் கூறுவர்கள்; "ஸாரஂ து ஸாரவ்யதா ஜாநீதே நிதராம்" என்னப் ...தவர்கள் சிலருளரேல் அவர்கள் இது அசட்டுத்தனம் வழியும் ச்லோகமே யென்று ...விவாதமாக இசைந்திடுவர்கள். * ஸ்வப்நசிந்தித: * என்பது அர்த்தமற்ற வார்த்தையே.

— தோதாரம்பாகர்ப்பஸ்வால ச்லோக ரசனையினழகு —

22. இனி உத்தரார்த்தத்தை விமர்சிப்போம்; * தோதாரம்பா கர்ப்ப ஸிந்து ஸுதாகரஸமப்ரப: * என்பது இரண்டாவது திருநாமம். தோதாரம்மையின் கருவில் ...ன்னிரண்டு ஸம்வத்ஸரம் வஸித்தவர் என்று இங்கே விவக்ஷை. தோதாராம்பாகர்ப ...ன்று ஸப்தமியாக்கித் தத்புருஷன் சொல்லவேணும். * ஸப்தமீ ஶௌண்டை: " என்கிற ...ணிநி ஸூத்ரத்தில் 'ஸப்தமீ' என்று யோகவிபாகம் செய்து இத்தகைய ப்ரயோகங்களைச் ...ஸமர்த்திப்பதுண்டு. இங்கு யோகவிபாகம் மஹா பாஷ்யத்தில் காணப்படவில்லை ...யென்று கொண்டு இந்த ஸமர்த்தநத்தை மறுப்பர்கள் ப்ராமாணிகர்கள். மநோரமையில் ...ஹத்துவித்தராவரத ஸூத்ரே இதற்கு மூலமுள்ள தென்றும் நிருபிக்கிறார்கள். இங்கு ...ஸமாஸத்தை கயஞிக ஸமர்த்திக்கலாமென்றே வைத்துக் கொள்வோம். சிறந்த ...வான்கள் செய்யும் ப்ரயோகமன்றிது என்பதை யாரும் மறுக்கில்லார். * தோதாரா

பாஹ்யவாஸக்ஷிவஸ்த்ரபவஸ்த்ர: * என்றால் ஒரு விரோதமுமின்றி எளிதாகப் பொருள் படுகிறதன்றே. இப்படியாக, விவக்ஷிதார்த்தத்தை விளங்கக் காட்டாமலும் வியாகரண சாஸ்த்ரஜ்ஞர் வெறுக்கும்படியாகவும் முதல் ச்லோகம் அமைந்திருப்பது போலவே முற்றும் அமைந்துள்ளது. 1008 திருநாமங்களில் ஒரு நூறு திருநாமங்கள் நிர்துஷ்டயாகத் தேறக் கூடும். உண்மையில் அவையும் அசடுபிசடு தட்டியேயிருக்கும்.

## — ஆக்ஷபாதீய மென்கிற அசுத்த ப்ரயோகத்தினழகு —

23. மற்றுமுள்ள அவத்யங்களையும் கேண்மின். * ஆக்ஷபாதீய மௌநத: * என்பது இருபதாவது திருநாமம். ஆக்ஷபாதீய மென்கிற சப்தம் அஸமஞ்ஜஸ மென்று தெரிந்துகொள்ள அதிக சாஸ்த்ரபரிச்ரமம் வேண்டியதில்லை. ஸம்பந்தார்த்தே அண் ப்ரத்யயம் கொண்டால் ஆக்ஷபாத மென்றாகும். * வா நாமதேயஸ்ய வ்ருத்தஸஞ்ஜ்ஞா வக்தவ்யா * என்ற வார்த்திகத்தின்படி வ்ருத்தஸஞ்ஜ்ஞை பெறுவித்த ச்ச ப்ரத்யய மேற்றினால் அக்ஷபாதீய மென்றாகும். ஆக, ஆக்ஷபாத மென்றோ அக்ஷபாதீய மென்றோ தேறுவதற்கு வழியுண்டே யல்லது ஆக்ஷபாதீய மென்கைக்கு ஒரு குறுக்கு வழி கூட கிடைக்காது. ஆக்ஷபாதீய மென்கிற இந்த அஸாதாரணப்ரயோகம் இதில் ஸக்ருத்தல்ல, அஸக்ருத்.

## — * வியாதா விஶ்வஸ்ருஷ்டய: * என்கிற அமரமுமறியாமை —

24. மேலே, 71, 72 திருநாமங்களில் "ஸர்வஸர்வஶப்தஸ்ருஜே நம:, ஸ்ருஷ்டிவாஸ் விஶ்வஸ்ரஜே நம:" என்று பதிப்பு. இங்கே ஸ்துதிகர்த்தா ச்லோகம் செய்திருப்பது எங்ஙனே யென்றால், 'ஸர்வஸர்வஶப்தஸ்ருட் ஸ்ருஷ்டிவாஸ் விஶ்வஸ்ருட்' என்றே! ஶப்தஸ்ருட் என்றால் அஸம்ஶயம் வருமாதலால் ஶப்தஸ்ருட் என்றே ச்லோகமியற்றி வைத்தார். ஸ்ருஜதியின்மேல் ஸ்ரஷ்டா வென்றும், ஸ்ருஜதியின்மேல் ஸ்ரஷ்டா வென்றும் ஆகிறுப்போலே ஸர்வஸர்வ ஶப்தஸ்ருஜதீதி ஸர்வஸர்வ ஶப்தஸ்ருட் என்றே யாகுமென மருண்டு போனாரென்பது ஸ்பஷ்டம். இது அத்யந்த ஶோசநீயமல்லவா? மேலே (197 லும்) * தத்வலக்ஷணஸ்ருட் * என்கிறார். நாம் எடுத்துக்காட்டும் அவத்யங்களெல்லாம் ஒவ்வொன்றும் அஸங்க்யங் காண்பனவே யொழிய ஸங்க்யை கண்டது ஒன்றுமில்லை.

## — குபேராக்ஷியழகும் குத்ஸிதரசநாப்ரகாரங்களும் —

25. அறுபத்தொன்று, அறுபத்திரண்டு நாமங்களில்—ஸ்ருதகர்ணகதாயாய நம:, குபேராக்ஷிகீர்த்திகாரகாய நம: என்றுள்ளது. இங்கு ச்லோகத்தின்வடிவு "ஸ்ருதகர்ணகதாய: கு — பேராக்ஷிகீர்த்திகாரக:" என்பதாம். இது எவ்வளவு சுவைமிக்க ரசனை யென்பதைக் கவிவரர்கள் கவனிக்கவேணும். அஸௌஷ்டவம் மிகமிக ரஸிக்கத்தக்கதாக வுள்ளதன்றே. (கச்சக்காய் குபேராக்ஷி எனப்படும். கழற்பா பாடினவர் என்று விவக்ஷித்து 'குபேராக்ஷீகீர்த்திகாரக:' என்றார் வக்தா; முத்ராபகர்கள் க்ஷீ என்கிற நெடிலெழுத்தைக் குறிலெழுத்தாக்கி அஸ்வாரஸ்யத்தைக் கெடுத்தார்களென்பது கிடக்கட்டும். 'குபேராக்ஷி' என்பதில் (கு) என்னுமெழுத்தை முன்பாதத்தில் சேர்த்து பேராக்ஷி யென்று அடுத்தபாதம் ஆரம்பித்திருக்குமழகு இந் நூலுக்குத் தனிச் சிறப்பாக வாய்த்திருக்கின்றது. இவ்வழகு இவ்வோரிடத்தில் மட்டுமன்று. இந் நூலில் பெரும்பாலும் இவ்வழகே நிரம்பியுள்ளது. ஆயிரத்தில் ஐந்நூறிடங்களுக்குக் குறைவில்லை. (73) ஶைவ, வைஷ்ணவதி ஸம்ப்ரதாய — ஸந்தர்ஶிதிவிக்ரம:. (90) த்யாஜதக வீணாஶ் — திவ்ய ஸ்ரீநிவாஸக:. (103) நிவிஷ்டலேஷ

ஸர்வஜ்ஞ: — ஸர்வஸஹஜ நிருபக்ஷிணா:. (108) யஜ்ஞாதிஸஹஜவிதி — ஷாஹேதுகஸ நிரோ (114) ஸநாதநாயத்ருஷ்ணோ — தோஷாஸாரகோவித:. (135) ஸம்விதலே — வஸ்துஸாதநவவதிவிக. (158) ஸஹஜதுக்கநிவர்த்தி — விசேஷநக. (162) ஸர்வாஸர்வவிவேகாஜ — வைகுண்டஸம்ப்ரவீத்ராக்ஷணா. (இதைமட்டும் சிலர் ஒரு ஸமர்த்திக்கலாமென்பர். இதில் ஸமர்த்தன மொருகேடு.) (176) சுயதகநதவாதிதா — நபிவகஷந:. (183) வெஹிம்ஸாஹிம்ஸதாஸ்ரவ — நநீதிஸ்நீதிக:. இங்கே ஆதாதநவிநதாஸம் மட்டுமன்று; வாகஉக்ஷஸம்ஹக்ஷிதழ என்கிற விசேஷமுமுண்டு. தா என்கிற சுவபஸவ வியொக வ்யாஸவமுமுண்டு.

## — பொறுக்கமுடியாத தலைவேதனைக்கு அடியானவாக்குக்கள் —

26. (190—191.) * வாஸாேஷாதநிர்வதிக்ஷிவிதேவாஸஸ்ரஸாம நிர்வக்ஷிவிக * என்றுள்ளது. இப்படியொரு அநுஷ்டுப்ச்சநை இவ்வுலகில் இதுகாறும் கண்டதுண்டோ? இதை இன்ன அஜூஸ்ஸென்று கண்டுபிடிக்கக்கூடுமோ? மூலவக்தாவானவர் "புருஷோத்தம தேவாஸஸ்ரஸாம நிருக்திவித்" என்று ஒரே நாமமாகப் படித்திருப்பர். அதை முத்ராபகர் இரண்டாக வொடித்திருப்பர் என்று ஊஹிக்கிறோம். இதுவும் தவறே. இதில் 'ஏகமக்ஷரம் பஜிதம்' என்ன நின்றமை காணலாம். இடையிடையே அச்சுப்பிழைகளோ அபரிமிதம். அவற்றை நாம் ஸ்தாவிப்பது வேண்டாவென்று விட்டிட்டோம். ஒவ்வொரு நாமத்தையும் வாசிக்கும்போது உண்டாகிற தலை வேதனையை எழுதி முடியாது. ஸ்ரீ கோபால தேசிகனே இதற்கு வக்தாவாகில் அந்த மஹானை அபரதேசிகனுகவே யெண்ணி தேசிகனிடத் தில் காட்டிலும் மிகவிஞ்சின பக்தியை அவரிடத்தில் கொண்டிருக்குமவர்களுக்குங்கூட வெறுப்பும் கசப்பும் கொதிப்பும் திகைப்பும் உண்டாகியே தீருமென்று சபதம் பண்ணிச் சொல்லுகிறோம். இந்நூலாசிரியர் த்வ்பாந்தராதாமதர் போலும்.

## — தலை காலில்லாத நாமங்களுக்கு அழுவதா சிரிப்பதா? —

27. (127) * ஸம்விதாநுக்ஷஹஜாடஸ — உயஞாநுக்ஷ நிரூபக: * என்கிறார். செவிக்கினிதை சொற் சேர்த்தி கிடக்கட்டும். இதற்கு என்ன அர்த்தமய்யா! என்று கேட்டால் ஒருவராவது வாய்திறக்கமுடியுமோ? சுஸஉயஞாநுக்ஷ நிரூபண மென்றால் என்ன? அதை தேசிகன் எங்கே பண்ணியிருக்கிறாரென்று கேட்டால் * தியிதியிவிஷொஷநயந: * என்கிற தியொழிய வேறுண்டோ? அஸமர்த்தனை ஆத்மாவென்று நிரூபித்தவர் என்று பொருளா? ஆத்மாவை அஸமர்த்தனுக நிரூபித்தவர் என்று பொருளா? என்று ஆலோசித்துப் பாருங்கள். இங்கு அச்சுப்பிழையுள்ளதாகக் கொண்டு 'சுஹஉயஞாநுக்ஷ நிரூபக:' என்று வைத்துப் பார்த்தாலோ, ஸ்ரீ பாஷ்யத்தில் மூலத்திலேயே ஸ்பஷ்டமாகவுள்ள விஷயத்தைவிட்டு தேசிகனுக்கு நாமமிடுவதில் என்ன விசேஷமோ? "ஆயிரத்தெட்டு நாமங்களில் 750 நாமங்கள் இப்படித்தானே யிருக்கின்றன; இதில்மட்டும் என்ன விப்ரதிபத்தி யென்பர்கள்; இதுவும் உண்மையே.

## — விம்சத்பத ஸ்ருஷ்டியில் விலக்ஷண ஸாமர்த்தியம் —

28. (692) * விம்ஸவஷஞாயீதஸவ்ஞ விதூரஸஹதிஸாஸஸ: * என்கிறார். அக்ஷாரிம்ஸக, வஞாஸக போலவே விம்ஸக என்று மூண்டென்று கொண்ட

இவருடைய மேதையை என்னென்பது? காவ்யங்களை மட்டும் வாசித்த சிறுசித்யார்த்திகூட இங்ஙனே ப்ரயோகிக்கத் துணியமாட்டானே. [illegible] கண்டு ஷஷ்ட மென்று ப்ரயோகிக்கிறவர்களுக்கு * [illegible] * என்பதற்கு இந்த வ்யாக்யானத்தை கோபாலதேசிக னென்று கூசாமலெழுதினவைப்பது என்ன ஸாஹஸமோ! * ஸிம்ஹ த்ருஷ்டே * என்கிற [illegible] யைக் கூட அறியாதவரா கோபால தேசிகனென்பவர்?

## — மூலகாரருக்கும் முத்ராபகருக்குமுண்டான சேர்த்தியழகு —

29. (226) * ஸஹஸ்ரகரண நாநாஸ்வநிராவஸிதோ பாஹ்யா கௌஷ்கத் நிராவக: * என்கிறார். இப்படியும் ஒரு ச்லோகபந்த மிருக்குமோ? * ஸஹஸ்ரகரண நாநாஸ்வ பாஹ்ய கௌஷ்கத் நிராவக: * என்று ச்லோகமிருந்திருக்கும். இதனை அச்சிட்ட பண்டிதர் இரண்டாகப்பிரித்து அச்சிட்டிருக்கிறாரென்று ஊஹிக்கிறோம். வக்தாவின் அபிப்ராயப்படி இது ஒரேநாமமேயொழிய இரண்டு நாமமல்ல. மற்றோரிடத்தில் இரண்டு நாமமாயிருப்பதை ஒரே நாம மாக்கி விட்டாரந்தோ!, அதனால் நாமஸங்க்யை குறைந்து போகவே ஒருநாமத்தை இருநாம மாக்கினரிங்கு. இப்படியாக, வக்தாவின் அஸாமர்த்தியமும் முத்ராபகரின் அஜ்ஞாந அந்யதாஜ்ஞானங்களும் சேர்ந்து இச்சுவடி கெட்டிருக்கிற கேட்டை என் சொல்லவல்லே னென்வாய்கொண்டே? வாயால் சிரிக்க வகையில்லை.

## — நாமாவளிகாரருடைய வ்யுத்பத்திவைலக்ஷண்யம் —

30. (218) * [illegible] — [illegible] நிராவக:. (232) [illegible] — [illegible] பாயக:. அந்தோ! இப்படி எதனையெடுத்துக் காட்டலாம்? சப்தம் காதால்கேட்கப் பிடிக்காமற்போனாலும் அர்த்தமாவது சுவை மிக்கிருக்கலாமே. இவர் விவக்ஷிக்கிற அர்த்தத்திற்கும் தொடுக்கிற சப்தத்திற்கும் ஐயோ! ஒரு சேர்த்தியுமில்லையே. "என் தாயார் ஆசார்யன் திருவடியடைந்தார்" என்றெழுத நினைத்து "ஆசார்யர் என்தாயார் திருவடியடைந்தார்" என்றெழுதினா ரொருவர் என்று கேட்டிருந்ததுண்டு; அவர் இவரே போலும். [illegible] வ்யாமத்திற் காட்டிலும் [illegible] வ்யாமத்தில் சுவை மிகுதியுண்டென்று கேள்விப்பட்ட வொரு பண்டிதர் "[illegible]" என்ன வேண்டு மிடத்தில் "[illegible]" என்றாராம். இந்த ஸஹஸ்ரநாமத்தில் ஒவ்வொரு ப்ரயோகமும் இதை வென்றதே யொழிய இதற்குத் தோற்றதன்று. இத்தகைய [illegible] நத்தில் வியப்பில்லை; இதனை [illegible] விக்கவும் அச்சிட்டு வெளியிடவும் ஒரு அரஸிகாளயருக்குத் தோன்றினதுண்டே அதுதான் மிகமிக வியக்கத்தக்கது. வேலையற்றவரும் இந்த வேலை செய்யகில்லார்.

## — பரிமளாசி வதவர்ஷி பாண்டிகாபம் —

31. இந்த நூலாசிரியர்க் கென்று வியாகரண சாஸ்த்ரமே தனிப்பட்டு விட்டதந்தோ! (263) [illegible]........என்கிறார்; இன்னோரிடத்தில் பரிமல: என்கிறார்; மற்றோ ரிடத்தில் ஸமீகரண மென்கிறார். மற்று மோரிடத்தில் பரிசுத்தி யென்கிறார். பரிபாகசப்தம் போலே பரிபாக சப்தமு முள்ளதென்று கண்டவிவர் அதற்கு என்ன நிமித்த மென்பதைக் காணகில்லாமல் யதேஷ்டமாக உபஸர்க்கம் நீண்ட சொல்தொடர்களைத் தொடுக்கிறார்.

...வஜ்ர... * என்கிற ஸூத்ரத்தை இவர் அரைகுறை யாகக் கேட்டிருக்கிறார். இதில் வஜ்ர என்றால் என்ன? என்பதைக் கேட்டறிந்திலர்.

## — ... முதலான அவலக்ஷணங்கள் காட்டுதல் —

32. * ... (334) என்கிறார். அர்த்தமோ வெகு அழகு; சப்தமோ அதற்குமேலழகு. * ... * என்னும் திருக்கச்சி நம்பி திருவாக்கில் ... மென்றிருப்பதைக் கண்டவிவர் இப்படி ... மென்று ... தும்போலுமென்று க்ரஹித்து விட்டாரந்தோ! சாஸ்த்ரஜ்ஞர்கள் ப்ரசம்ஸம் பண்ணிக் கொண்டாடக்கூடிய வாக்விந்யாஸம் ஒன்றிரண்டாவது கிடைக்குமாவென்று நாம் எத்தனை ஏடுகளைப் புரட்டினாலும் * ... * ... தா... — திவாத ... நாமக: * என்றிப்படிப்பட்ட திருவாக்குக்களே கொள்ளை கொள்ளையாகக் கிடைக்கின்றன விதில். ஸம்ஸ்க்ருதத்தில் (...) என்றொரு சொல் கேட்டதுண்டோ? தருக்கில் கேட்டதாக நினைவு. அதற்குமேல் திவாத மென்று உள்ளது. திமிர்வாத மென்று அர்த்த மிருக்கு மென்றார் ஒரு நண்பர். அதற்கு ப்ராமாணத்தை தேசிகன் எப்படிச் செய்தாரோ தெரியவில்லை. ஏதோ இரண்டோரிடங்களில் இப்படி கண்டால் '...' என்று விட்டுத்தொலைக்கலாம். "அவலக்ஷணப்ரயோகங்களையே அடுத்தடுத்துப் பண்ணக்கடவேன்" என்று ஸங்கல்பமோ சபதமோ ப்ரதிஜ்ஞையோ செய்து கொண்டு கிடைர் இவர் இந்த ஸ்துதிரசனையில் இழிந்தது.

## — இந்த ஸஹஸ்ர நாமம் தேசிக ஸூக்திகளுக்குக் கண்டனமே —

33. இந்த நூலின் வைலக்ஷண்யத்தை முந்துறமுன்னம் தெரிவிக்க எழுந்த முகவுரையார் — "இந்நூலில் பதங்களின் அமைப்பு, வாக்யங்களின் அமைப்பு, பொருளலங்காரம், சொல்லலங்காரம் முதலியன பொருந்தியுள்ளன. எளியபதங்கள், அழகான சொற்கள்........ ......இந்த ஸஹஸ்ர நாமத்தை நன்கு தெரிந்து கொண்டால் ஸ்ரீ தேசிகன் ஸாதித்த நூற்றுக்கணக்கான க்ரந்தங்களின் ஸாரார்த்தங்களும் தெளிய உணரலாகும். அவ்வண்ணம் சொல்லழகு வாய்ந்த நூலிது" என்றெழுதியுள்ளார். அந்தோ! எல்லாம் விபரீதம். தேசிகனுடைய திவ்யஸூக்திகளில் நாம் தெளியக்காணும் திவ்யமான அர்த்தங்களுக்கும் இந்த நாமாவளிகாரர் தெரிவிக்கும் அர்த்தங்களுக்கும் ஸம்பந்த கந்தமுமில்லையே. ஸம்பந்தமில்லை யென்கிறவளவேயன்று; தேசிகனுடைய திவ்ய ஸூக்திகளை நேராகக் கண்டிக்கிறமுறையிலும் பல நாமாவளிகள் தோன்றியுள்ளன. சில காட்டுவோம். (911) * ... * என்கிறார். எம்பெருமான் அவ்யாஜரக்ஷகன் என்கிற வாதத்தைக் கண்டித்தவர் தேசிகன் என்பது இத்திருநாமத்தின் பொருள். திருவாய்மொழியில் (1—10) * பொருமாநீள் படை * என்கிற பதிகத்தின் ஸாரத்தை ஸங்க்ரஹிக்கிற ஸ்வாமி தேசிகன் * ... * என்றருளிச் செய்திருப்பதைக் கண்டிப்பதன்றோ இந்த நாமம். (914) * ... * என்கிறார். ப்ரணவரணம் மோக்ஷத்திற்கு உபாயமன்று என்கிற வாதத்தைக் கண்டித்தவராம் தேசிகன். * ... * என்று ரஹஸ்யத்ரயஸாரத்திலும், * ... * என்று ந்யாயஸித்தாஞ்ஜநத்திலும் ஸ்வாமியருளிச் செய்தவற்றுக்குக் கண்டனமன்றோ இந்த நாமம்.

### — ஸ்ரீபதம் உபலக்ஷகம் என்கிற ஸ்வஸூக்தியைக் கிளப்புதல் —

34, இந்த விசித்திரம் கேளீர். (919) *த்வய பூர்வ ஸ்ரீபதோபலக்ஷகத்வ விநாசக: என்கிறார். த்வயத்தில் பூர்வகண்டத்திலுள்ள ஸ்ரீ யென்கிற பதம் உபலக்ஷணம் என்கிற வாதத்தைக் கண்டித்தவராம் தேசிகன். அந்தோ! இதென்ன விபரீதஜ்ஞானம். ஸ்ரீபதம் உபலக்ஷணம் என்கிற வாதம் எழுந்ததுமில்லை, அதை ஸ்வாமி கண்டித்ததுமில்லை. ஸ்ரீ பதத்திற்குப் பிறகு உள்ள மதுப்பின் அர்த்தவிசாரத்தில் பிராட்டியோடு கூடியிருக்குந்தன்மை எப்படிப்பட்டதென்கிற சர்ச்சை நேர்ந்திருப்பதை இந்த நாமாவலீகாரர் தெரிந்துகொள்ளவில்லை. ஸ்ரீ பதம் த்வயத்தின் பூர்வ வாக்யத்திலுமுள்ளது உத்தரவாக்யத்திலுமுள்ளது. இரண்டிடத்திலும் ஒரேவிதமான பொருளைத்தான் ஸகலாசார்யர்களும் ஸமகண்டமாகச் சொல்லுவது. மதுப்பும் பூர்வ — உத்தரவாக்யங்களில் இருக்கச் செய்தேயும் அதன் அர்த்தமான நித்யயோகத்தை நிர்வஹிப்பதில் யோஜநாபேதமுள்ளது. அதனைச் சிறிதும் க்ரஹிக்க மாட்டாத இவர் "த்வய பூர்வ ஸ்ரீபதோப — லக்ஷகத்வ விநாசக:" என்று நாமமிட்டது மிகவும் அஸமஞ்ஜஸமே. ராமபதம் உபலக்ஷணம் என்றால் லக்ஷ்மணனையும் கூட்டிக் கொள்ளும் என்றதாகும். க்ருஷ்ணபதம் உபலக்ஷணம் என்றால் பலராமனையும் கூட்டிக் கொள்ளு மென்றதாகும். இவைபோல ஸ்ரீபதம் உபலக்ஷணம் என்றால் பூமிப்பிராட்டியையும் கூட்டிக் கொள்ளு மென்றதாகும். அப்படி யாரும் சொல்லவுமில்லை; அதை ஸ்வாமி தேசிகன் கண்டிக்கவுமில்லை. கீழே யெடுத்துக்காட்டின 'விம்சத்வர்ஷே' என்ற பிரயோகத்திலே சப்தஸ்வரூபத்தில் அத்யந்தம் பரிஹாஸ்யரானது போலவே அர்த்தஸ்வரூபத்திலும் இங்குப் பரிஹாஸ்யராயினர். அக்கிலி பிக்கிலி ஞானமுடையவரே இவர்.

### — பட்டர் ஸ்ரீ ஸூக்தியை நேராகக் கண்டிக்குமது —

35. இதோரற்புதம் கேளீர். *ஸ்வரக்ஷணார்த்த வ்யாபார ஸ்வரூபத்வ விரோதிதா ஸூக்தி ஸம்வாஹ:* (924) என்கிறார். ஸ்வரக்ஷணார்த்த வ்யாபாரம் ஸ்வரூபாநுரூபமன்று என்கிற வாதத்தைத் தூக்கித்தள்ளுகிறவர் தேசிகன்—என்றது இதனால். பட்டர் அஷ்டச்லோகியில் *ஸுஹ்ருதநேந் ஸ்வரூபநிருத்த விதி — விரோதி:* என்கிற ஸ்ரீஸூக்தியினால் ஸ்வரக்ஷணார்த்த வ்யாபாரம் ஸ்வரூபவிருத்த மென்று ஸ்பஷ்டமாகத் தெரிவித்தருளுகிறார். *தேஹாஸக்தாத்மபுத்தி:* என்கிற அந்த ச்லோகத்தில் தேஹாத்மாபிமாநம், ஸ்வதந்த்ராத்மப்ரமம், அந்ய சேஷத்வ ப்ரமம், பாந்தவாபாஸலோலுபத்வம் முதலானவற்றோடு கூட ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது பட்டரால். இவை யெல்லாம் ஸ்வரூப விருத்தங்களென்று ஸ்பஷ்டமாகக் காட்டிற்றாயிற்று. இங்ஙனே சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷம் காட்டியருளின பட்டரை தேசிகன் தாக்கி யெறிந்துவிட்டாரென்று ஒரு அநபிஜ்ஞர் எழுதிவைத்தால் இதை ஒரு ஸ்ரீ வைஷ்ணவரா பரவிடுவது? இந்நூலில் முப்பதாவது திருநாமம் "ஸ்ரீபராசரபட்டார்ய மேகஸூக்த்யம்ப சாதக:" என்றுள்ளது, அதற்குமிதற்கும் பொருத்தமுண்டோ வென்று பார்க்க வேணும். சாதக: என்பதை நீக்கி (போஷக:) என்றாக்கினால் பொருத்தமாகுமே.

### — பகவத்கீதையை நேராகக் கண்டிக்குமது —

36. (974) * அவதாரரஹஸ்யஜ்ஞா— நாதிசோக்ஷ கரக்ஷஹ * என்கிறார். அவதாரரஹஸ்யஜ்ஞானம் மோக்ஷோபாயம்—என்கிற வாதத்தைக் கண்டித்தவராம் தேசிகன். பகவத் கீதையில் நான்காமத்யாயத்தில் * ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத: த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந! * என்கிற ச்லோகத்திலே அவதார

ஜ்ஞானத்திற்கு மோக்ஷோபாயத்வத்தை கீதாசார்யன் தானே ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருக்கக் காணுகின்றோம். அதைக் கண்டிக்கிறவர் தேசிக ரென்றால் இதனில் விகோரபர்வுண்டே? தேசிகனுடைய கீதாபாஷ்யதாத்பர்ய சந்திரிகையைக் கண்டு தெளிய வேணுமிவர். இத்தகைய அக்கிலிபிக்கிலி வாக்ராசிகளை எவ்வளவு நாமாராய்வது.

## — சுஷ்கவார்த்தைகளை வீணாக இட்டு நீட்டுகிறாரென்பது —

37. முடிவிற் செல்லுவோம். (1004) *ஆசார்யக்ருத்யவித் ஶிஷ்யக்ருத்யவேதி* என்கிறார். ஆசார்ய க்ருத்யமறிந்தவர் என்றதுபோல சிஷ்யக்ருத்யமறிந்தவர் என்றும் சொல்ல விரும்பினரிங்கு; இதை * ஆசார்ய சிஷ்யக்ருத்யஜ்ஞ: * என்று ஒரு சிறு வார்த்தை யாகச் சொல்லி முடிக்கலாம். தனித்தனியே சொல்லவேணுமானாலும் * ஆசார்யக்ருத்யவித் சிஷ்யக்ருத்யவித் * என்று சொல்லி, மேலே பாதபூரணத்திற்கு "நித்ய கர்மவித்" என்றோ; "பக்திமாந் சுசி:" என்றோ "ஸ்வாத்யாய ஹாஷண:" என்றோ இட்டிருக்கலாம். "சிஷ்யக்ருத்ய வேதீக்ஷித:" என்று நிரர்த்தகமாக இட்டு நீட்டி வளர்த்துகிறார். சிஷ்யக்ருத்ய வேதனத்தில் தீக்ஷிதத்வமாவது என்ன? என்று கேட்டால் வாய்திறப்பாருளரோ? இப்படிப்பட்ட வீண் வம்பு வளர்ப்பான வார்த்தைகளே வடிவெடுத்ததாயும், நானாவித அவத்யஜடிலமாயும், விவக்ஷிதார்த்தங்களை வ்யக்தமாகத் தெரிவிக்கமாட்டாததாயுமிருக்கின்ற இந்நூலை ப்ரஸித்த மான வொரு மஹான் செய்ததாக வெளியிடுவது பொருந்துமா என்பதை இன்னுரிமையா மென்கிற வாசியின்றிக்கே யாவரும் விமர்சிக்கலாம். கல் வெட்டாக நாம் மீண்டும் தெரிவிக்கிறோம்—ஸ்ரீ கோபால தேசிகனையே இச்சிறு நூலுக்குக் கர்த்தாவாக அவரைச் சார்ந்தவர்கள் யாவரும் நிர்விவாதமாகக் கொள்ளுவதனால் அவரை ஒரு ஸாமாந்ய பண்டிதராகக் கொள்ளவேண்டியது தவிர வேறில்லை. அவரை விசிஷ்டவித்வத்வரிஷ்டரென்று கொள்ளுவதனால் அப்பெரியார்பெயரால் இந்நூல் வெளிவந்ததை அவரிடத்தில் பக்தியுக்தர்களான ஸகல வித்வான்களும் மறுத்துத் தீரவேண்டும். "அந்த மஹானும் வித்வத்வரிஷ்டரே; இச்சிறு நூலும் அவர் ஸாதித்ததே" என்று ஸ்தாபிக்க ஆற்றலுடையார் இந்த நமது விமர்சத்தைக் கண்டு ஒரு க்ஷணமும் வாளாவிருக்ககில்லார். வருக வருக வருக வெழுக.

## — அதிகரண தர்ப்பண ஹரிதிநதிலகங்களில் விபரீதஜ்ஞானம் —

38. இன்னமும் இதிலுள்ள அஸம்பத்தவ்யாஹாரங்களைச் சோம்பாது திருப்பிக் கிறோம், குறிக்கொண்மின். (199) * அதிகரண ஸாராவளீ ஸாராவளிர்வாதிவாரணி: * என்னுமிந்த ச்லோகத்தில் ஒரு பாதம் ஒன்பதெழுத்து, மற்றொருபாதம் எட்டெழுத்து; இதமதிகளுக்கும் ஸம்பவிக்கமாட்டாத இப்படிப்பட்ட அவத்யங்கள் இதில் பஹுளமாகை யால் இது கிடக்கட்டும்; இதற்கடுத்த திருநாமம் * ஸாராவளீவ்யாக்யாதிகரணாத ரசகாரக: * என்றுள்ளது. இத்தால் அதிகரணஸாராவளிக்கு வியாக்கியானமாக ஸ்வாமி தாமே அதிகரணதர்ச மென்றொரு க்ரந்தம் ஸாதித்ததாகத் தெரிவிக்கப்படுகிறது. ஆதர்சமும் தர்ப்பணமும் பர்யாய மாகையாலே அதிகரணதர்ப்பண மென்று விவக்ஷிதமென்றே வைத்துக் கொள்வோம். தேசிகனுடைய திவ்ய ஸூக்திகளில் அதிகரணதர்ப்பண மென்றொரு க்ரந்த மவதரித்ததாக யாரும் சொல்லக் கேட்டதுமில்லை, எழுதியிருக்கக்கண்டதுமில்லை. திருக்குமாரரான நயனாசார்யர் அப்பெயருள்ள க்ரந்தமொன்று பணித்ததாகச் சொல்லுவ துண்டாம். ஆனால் அது அதிகரணஸாராவளிக்கு வியாக்கியானமன்று. அதிகரண சிந்தாமணி யென்று அது அச்சிடப்பட்டுள்ளது. அதுவும் திருக்குமாரர் ஸாதித்ததன்றென்று கீர்த்தி

மூர்த்தியான திருப்புட்குழி ஸ்வாமி ஸாதிப்பரென்று ஸ்ரீமத் தண்ட்ரி பட்டப்பா தாதாசார்ய ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன். ப்ரக்ருதம் அவ்விஷயம் அநபேக்ஷிதம். அதிகரண தர்ப்பண மென்பது தேசிகக்ருதியன்றென்னுமிடம் நிர்விவாதம். இந்நூலின் முகவுரைகாரர் (பக்கம் 11ல்) தேசிக திவ்யக்ரந்தங்களைப் பரிகணனை பண்ணுமிடத்து "தத்வடீகை, அதிகரண ஸாராவளி, அதிகரண தர்ப்பணம், தாத்பர்ய சந்திரிகை,......ஹரிதிநதிலகம்......" என்றெழுதிப்போகிறார். இதைப்பார்க்குங்கால் இந்த முகவுரை காரரே இந்த ஸஹஸ்ரநாமத் திற்கும் கர்த்தாவாக இருப்பர்போலு மென்று எண்ண நேர்கின்றது. "ஹரிதிநதிலகம் அர்வாசீநக்ருதமே யொழிய தேசிகன் ஸாதித்ததன்று" என்று ஸ்ரீமத். ராயம்பேட்டை க்ருஷ்ணமாசார்ய ப்ரப்ருதிகளான நிரூபகர்கள் பலகால் எடுத்துக்கழித்திருப்பது ப்ரஸித்தமாயிருந்தும், இந்த முகவுரைகாரர் இப்போதுதான் த்வீபாந்தரத்தில் நின்றும்வந்து இறங்கினவர் போல மனம் போன போக்கில் எழுதப் புகுந்தார். எவ்வுள் கிடந்தான் விஷயமாக தேசிகன் ஒரு ஸ்துதி ஸாதித்திருந்ததாகவும் அதற்கு கிம்க்ருஹேசஸ்துதி யென்று பெயரென்றும் தெரிவித்து அந்த ஸ்துதியையும் [இருபது ச்லோகம்] சிலர் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள். அதை இவர்கள் ஏன் தொடாது விட்டிட்டார்களோ தெரியவில்லை.

## — விஹிதா என்னும் பதத்தினழகு. —

39. * வருஷிவஷ்ராதிஅதா உஷ்வஹாதா வக்ஷவிஹிதா * (210) என்றொரு திருநாமமாம். (விஹிதா) என்கிற பதம் எந்த நாட்டினின்று கொணர்ந்தாரோ அறிகின்றிலோம். சொல் கிடக்கட்டும்; பொருள் அழகியதோ வென்று பார்க்கிறோம்; பொருள் கிடக்கட்டும், சொல் தொடையாவது அழகியதோ வென்று பார்க்கிறோம். சாகுந்தல நாடகத்தில் * ஸகக்கெவ அபிஷெ ஹணாஇ கி, ஸகக்ஸகலெ * என்றதுதான் விநோதம் நினைவுக்கு வருகிறது.

## — மிகவழகிய அத்புத ஸமாஸங்கள். —

40. (445) * ப்ரத்யக்ஷச்ருதிப்ரமாண ஸ்தாபிதோர்த்வபுண்ட்ரக: * என்றொரு திருநாமம். இதற்கு என்ன அர்த்தமோ? ஊர்த்வபுண்ட்ரப்ராமாண்யத்தை ப்ரத்யக்ஷச்ருதியினால் நிரூபித்தவர் என்று வக்தாவுக்கு விவக்ஷை. உள்ள சொல் தொடையில் இவ்வர்த்தம் கிடைக்க வழியில்லையே. தேசிகன் அணிந்து கொண்டிருக்கிற ஊர்த்வ புண்ட்ரமானது ப்ரத்யக்ஷச்ருதி ரூபமான ப்ரமாணத்தாலே ஸ்தாபிதமானது என்கிற பொருள் தவிர வேறு பொருள் தோற்றுகிறதா. ப்ரத்யக்ஷச்ருதிப்ரமாணேந ஸ்தாபித ஊர்த்வபுண்ட்ர: யஸ்ய ஸ: என்று இப்படித்தான் பஹுவ்ரீஹி சொல்லித் தீரவேண்டும். இதன்படி மேலே நாம் காட்டின பொருள் தவிர வேறென்று தேறுமோ? * ப்ரத்யக்ஷச்ருதிஸம்ஸித்தோர்த்வபுண்ட்ர ப்ரகாசக: * என்று இயற்றக் கூடாதா? இதற்கடுத்த திருநாமம் * ஊர்த்வபுண்ட்ரப்ரமாணஜ்ஞ—த்ரிதண்டாஸ வசாரணவிக்ஷ * என்பதாம். * ஸ்ரீமத்வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ வேதாந்தாசார்யவர்யோமே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி ॥ ஸ்ரீவெங்கடாத்ரிபாதாய ஸாரணிக்ரந்த தீக்ஷித: ॥ காஞ்சீவாஸாத் ஹிதேச்ச ப்ரபந்நாநாம் ப்ரபோதக: । தோதாத்ரிகாசார்ய ஸ்ம்ருதி ஸர்வக்ஷ விஜயக: ॥ என்றிப்படிப்பட்ட திருநாமங்களை யெழுதி வைத்தாலாவது புண்ணியமுண்டு. * ஸர்வதீர்த்தஸ்நாநஸாத்விக ஸாதுஸேவிதவாங்முக: * என்று எளிதாக எழுத வேண்டியதை எவ்வளவு வெறுப்புக்கிடமாக எழுதிவைத்தாரந்தோ.

## — ஸாமாஸிகஸாஹஸ்ர நாமாவளிகள். —

41. * ஸாம்ப்ரஸம்வத்ஸராவிசாரக: * என்றொரு திருநாமம். கோவில்களில் எத்தனை திருமண்காப்புகள் நிகழ்கின்றன வென்று தேசிகன். விசாரித்துக் கொண்டிருந்தாராம் விசாரித்து என்ன தெரிந்து கொண்டாரென்பதை டிப்பணியிலாவது எழுதியிருக்கவேண்டும். துபோகமொரு ஸாம்ப்ரதாயிகா—ஸந்தீக்ஷாயாசாரய: * என்றாவது எழுதியிருக்கவேண் ஸாம்ப்ரதாயிக விசேஷஜ்ஞ: * என்று எளிதாக எழுதவேண்டியதை * ஸாம்ப்ரதாயிக விசேஷாவகாசிக: * என்று வீணாக நீட்டியுள்ளார். (460) ஸாம்ப்ரதாயிகதைவஜ்ஞ: * என்றொரு திருநாமம். இது மிக மிக அவச்யமான திரு ஏனெனில், திருமண்காப்பில் தியானிக்கவேண்டிய தேவதையை தேசிகன் தவிர வேறொரு ஸ்ரீவைஷ்ணவரும் அறியாரன்றோ. (462) *விஷ்ணுபோஜனாஹ்ருதஸுதாஸமஸந்தானப்ரிய: * என்றொரு திருநாமம். திருவாழ்த்தான் ஸம்ஸ்க்ருதமென்று கேட்டதுண்டு. * சனிவாஸரே வஹ்நே தாவய * என்பனும். 'சாயத்திக்கிழமையில் காச்சு' என்று இதற்கு அர்த்தமாம். தோழுந்தூராண்டவன் இதை வெகு சமத்காரமாக ஸாதிப்பர். இந்த ஸஹஸ்ரநாமத்தின் பாஷைக்கு அந்த திருவாழ்த்தான் பாஷை ஆதேசமாய்விட்டதந்தோ? விஷ்ணுவுக்கான அன்னத்தை அபக்தர்களின்கண் பார்வை பட்டால் அந்தப் பார்வையை ஓட்டிவிடுவதில் தேசிகன் ப்ரீதியுள்ளவராம். இப்படிப்பட்ட அர்த்தவிசேஷங்களை இருபக்கங்களிலும் கதவுகளையடைத்துக் கொண்டு ஏகாந்தமாக அஷ்டமண்ணமாயுபதேசிக்க வேண்டியிருக்க ஐயோ! இப்படி அச்சிட்டுப் பரவவிடுகிறார்களே யென்று பரிதபிக்கிறோம். தேசிகனுடைய எந்த க்ரந்தத்தில் எந்த பங்க்தியிலிருந்து இப்படிப்பட்ட விசேஷார்த்தம் கண்டறிந்து எழுதினரோ அறியோம். முகவுரைகாரரோ இந்தச் சேடி தேசிக திவ்ய ஸூக்திஸார மென்று மெச்சுகிறார். இதை மெச்ச அவரே அதிகாரி.

## ——— ஆயிரமாயிரமாக நாமாவளிகள் இயற்றலாமே. ———

42. இதரர்களுக்கு நாமாவளிகள் நிருமிக்கவேணுமானால் சிரமப்படவேண்டும். அபரிமித திவ்ய ஸூக்தி ஸந்தாயகரான தேசிகனுக்குப் பலகோடி நூறாயிரம் திருநாமங்களை அவலீலையாக எழுதிப்போகலாமே. அப்படி இவர் எழுதத்தக்க வழி கேளீர்;

* கஜவக்த்ராத்யம் ஸாஸாம்வஸித ஸ்தத்யாத்யஸாஸாவஸாந: ।
ஸஹஸ்ர ஆரீம் பௌஷபேதி ஸ்ரீவஸந்தோத்ஸவக ॥
வஸந் வைகாலவைநாநத்தி வைநஸ்ரவஸந: ।
பவித்ரோத்ஸவஸித்தஸ்தக்ஸ்தோத்ஸவநிஷ்டுதி: ॥
நாமாந்தரஜ்ஜநா தைநந்தாஸநாமாஜாதிஷ்டவ: ।
நவராத்ரமஹோத்ஸவ ஸித்தாதிபந்தோத்ஸவஸிதா ॥
யதிப்ரவாஹோர்ஜிதி வைஷ்ணவப்ரதஸ்தக: ।
தத நாதிதத்ஸதேஷு வாஸயிகாரகோவித: ॥
மாயா தாயா மநா நாரதத்ரதாரப்யஸவதா: ப்ரத:
கவிகஸ்ஸமஷ கவிதாகீர்தி ஸம்ஸீரவாகத: ॥

இப்படி கர்ணாம்ருதமான கவிதைகளை க்ஷணத்திலாயிரமாயிரமாக ஸ்ருஷ்டிக்கலாமே.

### — 'வயம் வா வயமேவ வா' என்ன நின்றோம் நாம். —

43. உள்ளபடி நம்முள்ளத்தில் தோன்றியதைத் தெரிவிக்கிறோம். ஸ்ரீ கோபால தேசிகனென்னும் மஹானை ஸ்ரீ வைஷ்ணவர்கள் பலர் போற்றிவருவதாலும், இவர் திருவடிகளில் யதிச்ரேஷ்டர்களாய் மஹா ஜ்ஞாதாக்களான மூவர் ஆச்ரயித்து உஜ்ஜீவித்ததாகச் சொல்லப்படுவதாலும் இத்தகைய பெருமைவாய்ந்த வொரு மஹாசார்யர் இந்த அபத்தக்களஞ்சியத்தை இயற்றினரென்றால் இதை நாம் ஸஹியோம், ப்ராமாணிக பண்டிதர்களில் ஒருவரும் ஸஹியார். சில வாண்டுகட்கு முன் அடியேன் ஸ்ரீவரவரமுநயஷ்டோத்தரசதநாம ஸ்தோத்ரமென்றும், ஸ்ரீவரவரமுநி ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர மென்றும் இரண்டு ஸ்துதிகளை மணவாள மாமுனிகள் விஷயமாக இயற்றி வெளியிட்டிருந்தேன். அவை உலகமெங்கும் பரவியுள்ளன. அஸூயுக்களான வித்வான்களும் அவற்றைப் புகழ்ந்து வருகிறார்கள். இங்ஙனே தேசிகனுக்கும் ஸ்துதிகள் ஏற்படவேணுமென்று கருதிய சிலர் இதைச் செய்வித்து வெளியிட்டார்கள். அவர்கள் இவ்வாசையை நம்மிடமே தெரிவித்திருந்தால் தேசிகனுடைய பெருமைக்குத் தக்கபடி எவ்வளவோ அற்புதமாகவும் நிரவத்யமாகவும் இயற்றிக் கொடுத்திருப்போம். அது தேசிகனே ஸாதித்ததோவென்று எண்ணும்படியாகவும் அமைந்திருக்கும். இதை ஆத்மப்ரசம்ஸையாகச் சிலர் கொண்டாலும் குறையில்லை. * வயம் வா வயமேவ வா * என்று ஒரு மஹாகவி சொல்லிக் கொண்டதுபோல நாமும் ஸோமாகச் சொல்லிக் கொள்ள தேசிக திவ்யகடாக்ஷம் பெற்றிருப்பதை நாம் எதுக்கு அபலபிக்க வேண்டும். * ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: * என்கிற தனியனுடைய அக்ஷராநுபூர்வியில் சார்தூலவிக்ரீடிதத்தில் நாம் இயற்றி உரையோடும் வெளியிட்டிருக்கின்ற ஸ்ரீமத் வேங்கடநாத குரு ஸ்துதியைக் காண்பாரனைவரும் 'இது தேசிகனே ஸாதித்ததாக இருக்கவேண்டுமே யல்லது இதாநீந்தநர் இயற்றியதாயிருக்கத் தகுதியில்லை' என்றன்றோ சொல்லிவருவது. 'காடிக்குப் பிடித்தவிடமெல்லாம் மயிர்' என்னுமாபோலே தொட்ட தொட்ட விடமெங்கும் அவத்யமேயான அஸம்பத்தச் சுவடியை மஹா மௌரவஸ்தரான ஒரு பேராசிரியர் பணித்ததாக வெளியிட்டது பெருத்த ஸாஹஸமே. அஷ்டோத்தர சதநாமத்தைப்போல் இதையும் அநாமதேயமாக வெளியிட்டிருக்கலாமே. ப்ரஸித்தரான மஹா சார்யருக்கு இப்படியா அபகீர்த்தியை விளைப்பது! இதனில் மிக்க அநியாயமுண்டோ?

### — தேசிகன் ஸ்ரீரங்கம் சேர்ந்த காலத்து அங்குற்ற நிலைமை —

### [பிள்ளைலோகாசார்யரும் தேசிகனும்.]

44. நவீனர்கள் இப்போது இதை வெளியிட்டது தவறான சில ஐதிஹ்யங்களை இதில் பொறித்து வைத்து இதனால் ஒரு அல்ப ஸந்தோஷத்தை யடைவதற்கே யென்பதில் ஐயமில்லை. அந்த ஐதிஹ்யாபாஸங்களிலும் சிலவற்றை எடுத்துக்காட்டி அவற்றின் அநுபபத்திகளையும் உபபாதித்து இந்நூலை நிகமிப்போமாக. (773) * லோகாசார்யபதாதி ஸச்சிஷ்யார்பிதசாரீர பாஷ்யகஃ * என்றொரு நாமம். பிள்ளை லோகாசார்யர் முதலான ஸச்சிஷ்யர்களாலே ஸமர்ப்பிதமான சாரீரகபாஷ்யத்தையுடையவர் என்பது இச்சொல்வடிவத்தில் ஸ்வரஸமாகத் தேறக்கூடிய பொருள். "ஸ்வாமியின் ஆசார்யத்வ பூர்த்தியைக்கண்டு ஸ்ரீ பிள்ளைலோகாசார்யரும் ஸ்ரீபாஷ்யத்தை அதிகரித்து" என்று முகவுரை யெழுதினவரே இந்த நாமத்தையும் செய்தவராதலால் அவருடைய கருத்தின்படியே இதற்குப் பொருள் கொள்ளுவோம். ஸ்வாமி தேசிகனிடத்தில் ஆசார்யத்வ பூர்த்தியிருந்த தென்பதில் யாரும் விஸம்வாதப்படமாட்

டார். ஸ்ரீபாஷ்ய ப்ரவசநத்தில் ஸ்வாமிக்கு சக்தியில்லையென்றாவது அதிகாரமில்லையென்றா வது ஒருவரும் சொல்லார். தேசிகன் திருவரங்கம் பெரியகோயில் சென்று சேர்ந்த காலத்தில் பிள்ளைலோகாசார்யர் ஜீவித்திருந்து இருவர்க்கும் ஸாமாநாதிகரண்யமும் ஏற்பட்டிருந்து பிள்ளைலோகாசார்யர் அதற்குமுன் ஸ்ரீ பாஷ்ய க்ரஹணம் செய்யாதவராயுமிருந்திருந்தால் அவர் தேசிகனிடத்தில் ஸ்ரீ பாஷ்யம் கேட்டாரென்னப் பொருந்தும். இதில் விப்ரதிபத்தி பண்ண அவகாசமேயிராது. வஸ்துஸ்திதியோ வென்னில்; இவ்விருவர்க்கும் ஸமாகமம் சேர்ந்ததே கிடையாது. தேசிகன் ஸ்ரீரங்கம் சென்று சேர்ந்த காலத்தில் துருஷ்கயவநோப த்ரவ பாஹுள்யத்தினால் ஸந்நிதியில் கல்திரை சாத்தி உத்ஸவத்திருமேனியைக் காவல் செய்து கொண்டு வெளியேறின ஆசார்யர்களில் பிள்ளைலோகாசார்யர் ஒருவர். அப்போது தேசிகன் ஸ்ரீரங்கவாஸம் செய்ய கில்லாமல் ஸத்யமங்கலம் எழுந்தருளி அங்கே வெகுகாலம் வஸித்திருந்து, திருவரங்கமாநகர் நிச்சேஷரக்ஷகண்டகமாயிற்றென்று தெரிந்துகொண்டபின் ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார். அப்போது அவ்விடத்தில் பிள்ளைலோகாசார்யரோ அவருடைய திருத்தம்பியாரான அழகியமணவாளப் பெருமாள் நாயனாரோ பெரியவாச்சான் பிள்ளையோ யாரும் எழுந்தருளியிருந்ததில்லை. இவ்வாசார்ய ஸார்வபௌமர்களில் ஒருவரையும் தேசிகன் நேரில் ஸேவிக்கப் பெற்றவரல்லர். இவ்வாசார்யர்களின் திருவடி ஸம்பந்தம் பெற்று உபய வேதாந்த ப்ரவசந நிரதர்களான சில ஆசிரியர்கள் அப்போது ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்ததுண்டு.

## — * வித்வத்ஸேவா விமலமநஸா * விவரணம். —

45. அவ்வாசிரியர்களின் ப்ரவசந கோஷ்டியிலே யாத்ருச்சிகமாகவோ ஸ்வயம் விரும்பியோ அந்வயிக்கப் பெற்ற தேசிகன் அவர்கள் பக்கலிலே கேட்ட அர்த்த விசேஷங்களிலே நெஞ்சுருகி அவர்களிடத்தே ஆச்ரயித்து உஜ்ஜீவிக்க வேணுமென்கிற ருசியும் கிளர்ந்து அப்படியே ஆச்ரயித்தாரென்பது ஒருவராலும் மறுக்கமுடியாமல் தேசிக திவ்யஸூக்தியிலேயே ப்ரதிஷ்டை பெற்றுள்ளது. எங்ஙனே யென்னில்; ஸ்வாமி ஸாதித்த பகவத்த்யாந ஸோபாநத்தின் முடிவில் * ரங்காஸ்தாநே ரஸிக மஹிதே ரஞ்ஜிதா சேஷசித்தே வித்வத் ஸேவா விமல மநஸா வேங்கடேசேந * என்றிருப்பதை யாவரும் நித்யாநுஸந்தாநம் செய்துபோருகிறார்கள். இதில் என்ன தெரிவிக்கப்படுகிறதென்பதை ஸம்ஸ்க்ருதத்தில் ஸ்வல்ப பரிசய முள்ளவர்களும் எளிதாக வுணர்வர். ஸ்ரீரங்கமாநகர் ரஸிகர்களான மஹான்கள் எழுந்தருளியிருப்பதனால் மிக்க சிறப்புப் பெற்றுள்ளதென்பது "ரஸிகமஹிதே ரங்காஸ்தாநே" என்பதனால் வ்யக்தம். உடனே "ரஞ்ஜிதாசேஷசித்தே" என்றுள்ள ஸ்ரீரங்கவிசேஷணமானது 'ரஸிகமஹிதே' என்கிற சொற்சேர்த்திக்கு இணங்க – ரஸிகர்களான அந்த மஹான்களின் திவ்யஸூக்திகளை அவதரிப்பித்து அதனால் யாவருடைய சித்தத்தையும் ரஞ்ஜிப்பிக்கின்றது என்னுமர்த்தத்தை வெளியிடுவதாயிற்று. இவ்வளவு விஷயங்களை முதற்பாதத்தினால் விளக்கி உடனே * வித்வத் ஸேவா விமலமநஸா வேங்கடேசேந * என்று தம்மைப் பற்றின விசேஷத்தை வெளியிட்டுக் கொண்டார். இதுதான் இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளவுரியது. ஸ்ரீரங்கத்தில் ரஸிகர்களாயும் அசேஷஜந சித்தரஞ்ஜகர்களாயுமெழுந்தருளியிருந்த வித்வான்களிடத்திலே தேசிகன்தாம் ஸேவைபண்ணினதாகவும், அதனால் விமல மநஸ்காராகப் பெற்றதாகவும் தம்முடைய திருக்கையினால் ஸ்பஷ்டமாகப் பொறித்துள்ளார். பகவத்கீதையிலே தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா, உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்

தத்வதர்சிந: * என்றுள்ள ச்லோகத்தில் காணும் ஸேவா பதத்திற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாகவே இங்கு ‘ வித்வத் ஸேவா ’ என்று ப்ரயோகித்தருளினார். அதற்கடுத்தபடியாக விமல மனஸா என்றருளிச் செய்ததுண்டே, இது பரமகம்பீரமானது. ‘விமல மநஸா’ என்றது நிஷ் கல்மஷ மநஸா என்றபடி. ஸ்ரீரங்கஸ்தர்களான ரஸிகவித்வான்களை ஸேவிக்கப் பெறுவதற்கு முன்னே தாம் ஸகல்மஷ மநஸ்கராயிருந்ததாக ஸ்பஷ்டமாய்க் காட்டப்படுகிறதன்றோ விதில்.

— அபீதிஸ்தவஸூக்தி விசேஷத்தையும் சேர்த்து விளக்குதல். —

46. ‘விமலமநஸா’ என்றதற்கு அக்லிஷ்டமாகக் கிடைக்குமிப் பொருளை இசைவதற்குச் சிலர் [ச்ரத்தாஜடர்கள்] சிரமப்படக்கூடும். ஆதலால் இதில் விசேஷ சர்ச்சையை விட்டிடுவோம். ஸ்ரீரங்கத்திலே யெழுந்தருளி ரஸிகவித்வத்ஸேவை பண்ணினதை இந்த ச்லோகத்தினால் தாமே அருளிச் செய்திருக்கிறாரென்பது பேர்க்கவும் போராத விஷயமாயிற்று. ஸ்வாமி தேசிகன் ஒவ்வொரு நூலிலும் முடிவில் தம்மைப் பற்றியருளிச் செய்வதுண்டே. இப்படிப்பட்ட விசேஷணம் வேறு எங்கேனும் இட்டிருக்கக் கண்டதுண்டோ? ஸ்ரீரங்கத்திலே சில ரஸிக வித்வத்ஸார்வபௌமர்கள் எழுந்தருளியிருப்பது கேள்விப்பட்டு அவர்களின் திருவடி நிழலிலே யொதுங்கி வாழ்ந்து உய்யவேணு மென்கிற குதூஹலங் கொண்டே ஸ்வாமி தேசிகன் கோயிலுக் கெழுந்தருளினது. எழுந்தருளினபோது அதிஸ்வல்பகாலமே அங்குச் சில மஹான்களை உசாத்துணையாகக் கொண்டு வாழ ப்ராப்தமாயிற்று. அவர்களை விட்டுப்பிரிய மனமில்லாமலே தைவதுர்விபாகத்தால் அங்கிருந்து வெளியேற நேர்ந்தது. அப்போதும் அப்பெரியார்களோடுடன் வாழ்ச்சியே தேட்டமாயிருந்ததனால் அநந்தரமருளிச் செய்த அபீதிஸ்தவத்திலே “[illegible]” என்று இதையே வாய் வெருவினார். “அரங்கமாநகருளானே! உன் கோயில் நிஷ்கண்டகமாக வேணும்; நான் அங்கு வந்து சேரவேணும். ஆனால் உன்னை ஸேவிப்பதற்காக நான் அங்கு வர விரும்புகின்றிலேன்; பரஸ்பரஹிதைஷிகளான மஹான்கள் அங்கு வாழ்கின்றார்களே, அவர்களது திருவடிவாரத்திலேயாயிற்று நான் வாழ விரும்புவது; இந்த மநோரதத்தை நீ தலைக்கட்டியருளவேணும்” என்றன்றோ ப்ரார்த்தித்திருப்பது. இத்தகைய ஸ்ரீஸூக்திகளில் ஒன்றையும் காணாது இவற்றோடு முரண்படும்படியான அஸம்பத்த கதைகளை நவீனர்கள் நிராதாரமாக எழுதிவைப்பதனால் பரமார்த்த விபர்யயம் பரமாணுவளவும் நேராது.

— [illegible] —

47. ஸ்வாமி தேசிகன் தம் மாதுலரான கிடாம்பியப்புள்ளாரொருவர் தவிர வேறு யாருடைய பாதத்திலும் தலையை மடுத்தவரல்லரென்றும், அந்த ஆசார்யரிடத்திலே ஸேவை பண்ணினதையே * வித்வத் ஸேவாவிமல மநஸா * என்பதில் காட்டினாரென்றும் சில நவீனர்கள் சொல்லத் தலைப்படுவர்கள்; எடுத்துக் கழிக்கவும் தகாத அர்த்தமன்றோ இது. மஹாசார்யரான அவரை ஸ்வாமி ஸாமாந்யமான வித்வச்சப்தத்தினால் நிர்தேசிப்பரா? என்பதைக் கூட விவேகிக்கமாட்டாத அவிவேகிகளின் வார்த்தை என்னே!. அந்த ஆசார்யனை ரங்கஸ்தானத்தில் ப்ரஸ்தாவிக்கத்தான் என்ன ப்ரஸக்தி? பிள்ளை லோகாசார்யர் தேசிகனிடத்தில் ஸ்ரீ பாஷ்யமதிகரித்தாரென்று வைத்துக் கொண்டு பார்ப்போம்; அது அவர் அஷ்டாதசரஹஸ்யங்கள் அருளிச் செய்வதற்கு முன்பா பின்பா? என்று விமர்சிக்கவேணும்.

...சேகர, தத்வத்ரயாதி ரஹஸ்யங்கள் ஸ்ரீ பாஷ்யமே வடிவெடுத்திருக்கையாலே ஸ்ரீ பாஷ்ய ...ரிப்பதற்கு முன்பே ரஹஸ்யங்களிட்டருளினரென்னப் போகாது. பின்புதானென்ன ...ணும். இப்போது தத்துவம் நன்கு விளங்கிற்றாகும்.

## — தேசிக ரஹஸ்யார்த்த பரிஸ்திதி ப்ரதர்சநம். —

48. கேண்மின். தேசிகனியற்றிய சில்லரை ரஹஸ்யங்கள் பெரும்பாலும் ...காசார்ய ரஹஸ்ய பங்க்திகளே மலிந்துள்ளன வென்பது அபரோக்ஷம். இதை நாம் ...ரிசித்தவுடனே, இந்தச் சில்லரை ரஹஸ்யங்களைப் பார்த்தே லோகாசார்யர் ரஹஸ்ய ...ங்களை யெழுதினரென்று கூசாமல் கூறத் தலைப்படுவர் நவீனர். ஸ்ரீ லோகாசார்ய ...ஸ்யங்கள் அவதரித்த பின்பே ஸ்ரீ தேசிக ரஹஸ்யங்கள் தோன்றின வென்பது அசைக்க ...யாமல் தேறியுள்ளது. முமுக்ஷுப்படி ஸ்ரீ வசநபூஷண திவ்ய ஸூக்திகளில் சில பல ...ற்றை தேசிகன் அநுவதித்து ஒரு ரஹஸ்யத்தில் மறுப்பெழுதுகிறார்; மற்றொரு ரஹஸ்யத்தில் ...ன்பு மறுப்பெழுதினதற்கு அநுசயித்து) அவற்றுக்கு அபிப்ராயவர்ணநம் செய்தருளு ...ர். வேறொரு ரஹஸ்யத்தில் (முன்பு மறுத்த அர்த்தத்தை) தாமே உகந்து ரஸ்யமான ...ர்த்தமாக எழுதியருளுகிறார். ஆக, மறுத்தல் கருத்துரைத்தல் தழுவுதல் ஆகிய மூன்று ...ப்ரக்ரியைகளிலே லோகாசார்ய ஸூக்திகளை தேசிகன் கையாண்டிருக்கிறார். இதை நாம் ...து பல நூல்களில் பன்னிப்பன்னி யுரைத்து ஸ்தல விசேஷங்களையும் நிரூபித்திருக்கிறோ ...தால் இங்கு தத்விஸ்தரம் அநபேக்ஷிதம். பிள்ளைலோகாசார்யர் ரஹஸ்யக்ரந்தங்களை ...ளிச் செய்து தலைக்கட்டித் திருநாட்டுக்கு மெழுந்தருளியான பிறகே தேசிகன் ரஹஸ்ய ...ங்களை யெழுதத் தொடங்கினரென்பது அசைக்க முடியாதது. இத்தகைய ஸ்வாமி ...சிகன் லோகாசார்யர்க்கு ஸ்ரீபாஷ்ய முபதேசித்தாரென்றும், லோகாசார்யர் இவர் விஷய ...ச் * சீரொன்று தூப்புல் தனியனிட்டா ரென்றும் சொல்லிக் கொள்வதும் எழுதிவைப் ...தும் வெட்கமற்றவர்களின் பணியாமத்தனே. * சீரொன்று தூப்புலைப்பற்றிப் பிறகு ...பேசுவோம்.

## — [illegible] —

49. திருநெடுந்தாண்டகத்தில் (21) * மைவண்ண நறுங்குஞ்சி பாசுரத்திற்கு மிக ...வான வியாக்கியான மொன்று வெளிவந்துளது. இது பட்டருளிச் செய்ததென்று ...ரும் நம்பிள்ளை யருளிச் செய்த தென்று சிலரும் சொல்லுவர். இருவரில் ஒருவரே ...ன்பது திண்ணம். அந்த வியாக்கியானத்தில் * [illegible] என்கிற தேசிக ...ருளிய ச்லோகம் புகுந்திருக்கிறது. எங்ஙனே புகுந்த தென்னில், ஏட்டுப் பிரதிகளில் ...முடுக்குகளில் டிப்பணிபோல் சில ஸம்வாத ப்ரமாணங்களையும் வாக்யங்களையும் ...காலத்தவர் எழுதிவைப்பதுண்டு; அவற்றை க்ரந்தத்தோடு சேர்ந்ததாகவே ப்ரமித்துப் ...புள்ளார் அவற்றையும் விடாமல் அச்சிட்டு விடுவதுண்டு. இப்படிப்பட்ட ஸம்பவங்கள் ...பாஷ்ய பகவத் விஷயாதிகளிலும் ஆங்காங்கு நேர்ந்திருப்பதை மஹான்கள் நிரூபிக்கிறார் ... இந்த ரீதியிலேயே * ப்ராய: ப்ரபதநே பும்ஸாம் * என்கிற ச்லோகம் புகுந்திட்டது. ...வண்ணமாகவே பிள்ளை லோகாசார்யருடைய தனி சரமமென்கிற வொரு ரஹஸ்யத்தில் ... [illegible] * என்கிற ச்லோகம் புகுந்திருக்கிறதென்பதை நாமே யெடுத்துக் ...டியுள்ளோம். பிள்ளை லோகாசார்யர்க்கு தேசிகன் முற்பட்டவராயிருந்தால் அவரு

டைய ஸ்ரீ ஸூக்திகளை யுதாஹரிக்கத் தடையேயிராது. பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை தேசிகன் ரஹஸ்த்ரய ஸாரத்தில் உதாஹரித் திருப்பதையும், தேசிகன் ஸ்ரீஸூக்திகளை மணவாளமாமுனிகள் தம்முடைய வியாக்கியானங்களில் ஆறு இடங்களில் உதாஹரித் திருப்பதையும் யாரேனும் அபலபிக்க முடியுமோ? அஸம்பாவிதமானது ஸம்பவிக்கமுடியா தென்பதை ப்ராமாணிகர்கள் க்ஷேபிக்கப் புகார்கள்.

## — நவீநர்களின் ஸ்வகல்பித கதைகள். —

50. முக்கியமான தொன்று கேளீர். அறுநூறு எழுநூறு வருஷங்களுக்கு முற்பட்ட நிகழ்ச்சிகளை இக்காலத்தவர்கள் எழுதவேணுமானல் ப்ராமாணிகர்களும் நிஷ்பக்ஷபாதர்களுமான புராதனர்களின் நூலை ஆதாரமாகக் கொண்டு எழுதவேணுமென்பது புநருக்தம். இவர்களுக்கு அப்படிப்பட்ட நூல் எதுவும் கிடையாதென்பது இவர்களின் ஆசார்ய பதம் வஹித்தவர்களாலேயே விளக்கப்பட்டுள்ளது. பெரியவாச்சான்பிள்ளை தேசிகனிடத்தில் ஆச்ரயித்தாரென்று சிலர் எழுதுவது, வாதிகேஸரி ஜீயர் எதிரியாக நின்று ஸ்பர்த்தித்து ஸம்ஹரிப்பட்டாரென்று சிலர் எழுதுவது, ஆசார்ய ஹ்ருதயகாரரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனர் அஸூயைப்பட்டு ஸஹிஷ்ணுதரானரென்று சிலர் எழுதுவது........இப்படியாக அவரவர்கள் மனம்போன போக்கில் எழுதிவைக்கு மடைவிலே இப்போது 'பிள்ளை லோகாசார்யர் தேசிகனிடத்திலே ஸ்ரீ பாஷ்ய மதிகரித்தார்' என்கிற கல்பனை கிளம்பத் தொடங்கியது. தேசிகனுக்கு இன்னாரின்னார் சிஷ்யர்கள் என்று எழுதிவைத்துள்ள நூல்களுண்டே; அவற்றுள் இதுகாறும் இந்தப் பேச்சு ஒன்றிலாவது ஏறியிருப்பதுண்டோ வென்று ஒவ்வொருவரும் பார்க்கலாம். * ஶிஷ்டாசீர்ணவித வாதவதஃ * என்றும் * அத்வைதஸித்தப வந்யஸநாஸ்ததாம்ஸ்யந்யாஸு * என்றும் துதி பாடினர் பலருளரே.

## — திவ்யதேசங்களில் ஸதாசார விசேஷ ஸம்ப்ரதாயம். —

51. தென்னசார்ய ஸம்ப்ரதாய முறை வழுவாத அநாதி திவ்ய தேசங்களில் பிள்ளை லோகாசார்யரும் தேசிகனும் திருக்கோலங் கொண்டெழுந்தருளியிருக்குமிடங்கள் பலவுண்டே; இவ்வாசார்யர்களிருவர்க்கும் திருவோணமே திருநக்ஷத்ரமாதலால் அன்று இருவர்க்கும் விசேஷங்கள் நடைபெறுவதுமுண்டு. அப்போது பிள்ளை லோகாசார்யருடைய திருவடி நிலையை ஸ்வாமி தேசிகன் சென்னிக்கு அணியாகக் கொண்டு திகழும்படியை அநுபவித்து வருகின்றோமே, இதை அபலபிக்கமுடியுமோ?

## — ப்ராஸங்கிகமாக முநித்ரய ப்ரஸ்தாவம். —

52. * ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம் * என்கிற ப்ரமாணத்தில் ச்ரத்தையுடைய நாம், நவீநர்களுக்கெல்லாம் மிகவும் அப்ரியம் என்கிற காரணத்தினலே பலபல ஸத்ய விஷயங்களையும் வெளியிட ருசியுடையோமல்லோம். ஆனலும் அஸத்யார்த்த ப்ரசாரங்கள் தலையெடுக்குங் காலத்திலே ஸத்யார்த்தங்களை வெளியிடாது வாளாவிருப்பது தருமமன்றே. ப்ராஸங்கிகமாக வொன்று கேளீர். இருவகுப்பான ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஒரு வகுப்பில் மடம் முநித்ரயம் என்கிற வ்யபதேசபேதம் இரண்டொரு நூற்றாண்டாக வழங்கி வருகின்றது. ப்ரக்ருத தேசிக ஸஹஸ்ரநாம கர்த்தாவாகச் சொல்லப்படுகிற ஸ்ரீ கோபால தேசிகனிடத்தில் மூன்று யதிகள் ஆச்ரயித்த

ஸம்ப்ரதாய ப்ரவர்த்தநம் பண்ண, அது காரணமாக அந்த ஸம்ப்ரதாயத்திற்கு முநித்ரய ஸம்ப்ரதாயமென்று பேராயிற்றென்பது யாவருமிசைந்த விஷயம். இவர்களே எழுதி வைத்துமிருப்பதிது. இவ்வுண்மையை இசைந்து கொண்டால் இந்த ஸம்ப்ரதாயம் நவீந மென்று ஏற்பட்டுவிடுமே யென்று நாளடைவில் விழித்துக்கொண்டவர்கள் இப்போதிப் போது என்ன சொல்லவும் எழுதவும் தொடங்கியிருக்கிறார்களென்றால், ஆழ்வார்களுள் முதல் வரான முனிவர்கள் பொய்கையார் பூதத்தார் பேயார் என்று மூவராகையாலே அவர்களை முன்னிட்டு ஆவ்ருத்தமான தென்கிற காரணத்தினாலோ, ஸ்ரீமந்நாதமுனி ஸ்ரீயாமுநமுநி ஸ்ரீ ராமாநுஜமுநியென்கிற முனிகள் மூவராலே ப்ரவர்த்திதமான தென்கிற காரணத்தினாலோ ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கே முநித்ரய ஸம்ப்ரதாய மென்பது அநாதிஸித்தமான அஸா தாரண வ்யபதேசமென்று எழுதப்புக்கார்கள். சில வாண்டுகட்கு முன்பு அடியேன் கோயி லில் ஸ்ரீமத் பரமஹம்ஸ. தென்பரை யாண்டவன் ஸன்னிதியிலே சென்று வார்த்தையாடின போது இந்த ஸ்வாமி இவ்வண்ணமாக ப்ரஸ்தாவித்து "இப்படி நிர்வஹிக்கலாமென்று நினைக்கிறேன்" என்று ஸாதித்தார்; (அல்லது) ஸாய்க்கும்படியாயிருந்தது. இந்த நிர்வாஹம் இப்போது எட்டிலேறவும் தொடங்கிவிட்டது. அடியேனுக்கு * பஹவ: பூர்ண உபாவா: * என்றெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுபயவே. திருக்குடந்தை இளையவில்லி ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியின் ஷஷ்ட்யப்த பூர்த்திக்கு ஸ்மாரகமாக [நேற்று மார்கழி மாத முடிவில்] வெளி யிடப்பட்ட அபர்யாப்தாம்ருதமங்களாசாஸந ஸ்தோத்ரவுரைக்கு முகவுரை யெழுதியவரும் நமக்குப் பரமாப்தருமான ஸ்ரீமதுபயவே மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமி அம்முக வுரையில்—மைசூர் மஹாராஜ வம்சாவளீ க்ரந்தமென்று ஒன்றிருப்பதாகவும், அதில் கி. பி. பதினேழாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய வொரு மஹானைப்பற்றி யெழுது கையில் முநித்ரய ஸம்ப்ரதாய துரந்தரரென்று குறிப்பிட்டிருப்பதாகவுங் காட்டி "இதனால் ஸ்ரீவைஷ்ணவதர்சநமானது முநித்ரயஸம்ப்ரதாய மென்றே ஆதிகாலத்தில் வழங்கப்பெற்ற தென்பது தெளிவாகின்றது" என்றெழுதியிருப்பதை இன்றே (29—1—58 ல்) காணப் பெற்றோம். ஸாம்ப்ரதாயிக வ்யவஹாரத்திற்கு ஆதாரம் காட்ட நினைத்தவிவர்களுக்கு ஸம்ப்ர தாய க்ரந்த மொன்றிலும் ஆதாரம் கிடைக்காமற் போக, மலையேறி எலி பிடிக்குங் கதையாய் மைஸூர் மஹாராஜ வம்சாவளீ க்ரந்த மென்று ஒன்று கொள்ளப்பட்டது.

— மைஸூர் மஹாராஜ வம்சாவளீ க்ரந்த சர்ச்சை —

53. உண்மையில் அப்படி யொரு க்ரந்தம் உள்ளதுதானா? அதற்கு ஸர்வ ஸம்ப்ரதி பந்ந ப்ராமாண்யமுண்டா? அது என்றைக்குத் தோன்றியது? என்கிற விசாரத்தில் நாம் புகுகின்றிலோம். பண்டிதரென்று பேர் பெற்ற வொருவர் "நாமெடுத்துக்காட்டு மாதா ரத்தினால் நமக்குச் சிறிதேனும் லாபமுண்டா?" என்பதைக்கூட விவேகியாமல் இப்படி யெழுதுகிறாரே யென்றுதான் நாம் வருந்த வேண்டியதாகிறது. அந்த மைஸூர் மஹாராஜ வம்சாவளீ க்ரந்தத்தில் முநித்ரய ஸம்ப்ரதாய துரந்தரரென்று குறிப்பிடப் பெற்ற மஹான் கி. பி. பதினேழாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிப் பதினெட்டாவது நூற்றாண் டில் மறைந்தவரென்று தெரிவிக்கப் படுகிறது. அந்த மஹானைப்பற்றி எழுதப்பட்ட பகுதி 10, 20 வருடங்களுக்கு முன்பும் எழுதப்பட்டிருக்கலாம்; 100, 150 வருடங்களுக்கு முன்பு மெழுதப் பட்டிருக்கலாம். இவர்களது கொள்கைப்படி பதினெட்டாவது நூற்றாண் டிலேயே எழுதப்பட்ட தென்றே கொள்வோம். உண்மையாக உலகமெல்லாம் கொண் டிருக்கிற வண்ணமாக முநித்ரய ஸம்ப்ரதாய மென்கிற வ்யவஹாரம் தோன்றியதும்

பதினெட்டாவது நூற்றுண்டிலென்றுதானே சொல்லப்படுகிறது. கோபால தேசிகனுடைய அவதாரத்திற்கு முன்னே—இரண்டொரு நூற்றுண்டுகட்கு முன்னமே முநித்ரய ஸம்ப்ரதாய மென்கிற வ்யவஹாரம் க்ரந்தங்களில் ஏறியிருந்ததென்று காட்டினாலாவது பயன்படும். * ஹக்ஷிதெவி ரு ஹ-நெ நஸாணொ வஹாயிः. *

## — தேசிகதர்சந ப்ரஸ்தாவம் —

54. திருவிந்தளூரில் ஒரு ஸ்வாமி திருமாளிகையிற் பழைய ஏட்டுப்பிரதிகளெல்லாம் காப்பாற்றப்பட்டு வருகின்றன. அவற்றுள் திருவாய்மொழிக்குப் பதினாறுயிரப்படி வியாக்கியான மென்று ஒரு ஸ்ரீகோசமிருக்கிறதாம். அதில் * பொலிக பொலிகவில் "அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல்" என்றவிடத்து "முநித்ரய ஸம்ப்ரதாயஸ்தர், மட ஸம்ப்ரதாயஸ்தர்" என்று எழுதப்பட்டிருக்கிறதாம். அவ்விடத்தில் அது எதற்காக எழுதப்பட்டதென்று நமக்குத் தெரியாது. அங்கு அந்த வார்த்தையிருப்பது மட்டும் நன்கு தெரியும். அந்த வியாக்கியானத்தை இவர்கள் வெளிக்கிளப்பி, அது ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னமே த்ருபிப்ரஹ்மதந்த்ரஸ்வாமி பணித்ததென்றும் சொல்லி, அதை ஆதாரமாகக் காட்டி "கோபால தேசிகனுடைய சிஷ்யவர்க்கமான முநித்ரயம் தோன்றுவதற்கு முன்னமே — நெடுநாள் முன்னமே முநித்ரய ஸம்ப்ரதாய மென்கிற வ்யபதேசம் நிகழ்ந்துவந்த தென்பதை இதனால் நன்கு அறியலாம்" என்று இவர்கள் எழுதியிருக்கலாமே; இது மிக்க பொருத்தமாயிருக்குமே. பகவத்ராமாநுஜ தர்சனத்திற்குப் புறம்புபட்டது தங்கள் மதமென்று ஸ்பஷ்டமாகக் காட்டவேண்டி தேசிக தர்சந மென்று புதுப்பெயரிட்டுக் கொண்டாடியும், பூர்வாசார்ய ஸத்ஸம்ப்ரதாயத்திற்குப் புறம்புபட்ட தென்று நன்கு காட்டவேண்டி முநித்ரய ஸம்ப்ரதாய மென்று கொண்டாடியும் போருகின்றவிவர்கள்............மேலே வாக்யபூரணத்தை மஹான்கள் செய்து கொள்வது.

## — முநித்ரயவ்யபதேசத்தின் அபார்த்த நிரஸநம் —

55. பொதுவாக ஸ்ரீ வைஷ்ணவஸம்ப்ரதாயத்திற்கே முநித்ரய ஸம்ப்ரதாய மென்று அநாதியாக வ்யபதேச மிருந்துவந்த தென்பது உண்மையாயிருந்தால் ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களும் இந்த வ்யபதேசத்தை அன்று தொட்டே ஆதரித்திருக்கவேண்டும். தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்கள் நிற்க; இதரர்களில் ஏகதேசிகளான மடத்தார் என்னும் வகுப்பினர் முநித்ரய மென்று ஒருவர் வாய்திறக்கும்போதே சீறிச் சிவந்து வெறுத்துப்பேசுவது எங்குங் காண நின்றது. "முநித்ரய ஸ்ரீஜயந்தி, முநித்ரய ஸ்ரீராமநவமி" என்றிப்படி வழங்கி வருவதும் பஞ்சாங்கங்களிலும் ஏறியிருப்பதும் இல்லை செய்யப்போகாதது. திருச்சுடர்நதையில் முநித்ரயமந்திரமு முண்டாயிற்று. * யதார்த்தவாதீ பஹுஜநத்வேஷீ * என்பதை மறந்து நாம் இதைப்பற்றின மருமங்களை யெல்லாம் ஒன்றுவிடாமல் விளக்கப்புகுந்தால் மஹாபாரதமேயாகும். 'இவ்வகுப்பினர் புதிய புதிய கல்பனைகளில் கைவைக்குமவர்கள்' என்பதொன்றே ப்ரக்ருதம் நிரூபணீயம்; அதற்கு இவ்வளவே போதும். ஸ்வாமி யதிராஜ ஸப்ததியில் * யதிக்ஷமாப்ருத் த்ருஷ்டம் மதமிஹ நவீநம் ததபி கிம் * என்றொரு ச்லோகமருளியுள்ளார். எம்பெருமானார் தரிசன மென்றே நம் பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்த விஷயம் இதில் காட்டப்பட்டது. இதிலிருந்து மதாந்தரஸ்தர்கள் சில துர்வாதங்கள் செய்தார்கள் தேசிகன் காலத்திலேயே; அவற்றுக்கு நிவாரணமாக இந்த ச்லோக மருளிச் செய்யப்பட்டது தேசிகனால். பூர்வார்த்தத்தினால் ஸஹ்ருதய மநோவாதம் செய்தருளினார்; உத்தரார்த்தத்தினால் யதாவ

ஸ்தோர்த்த ப்ரகடநம் செய்தருளினர். டங்கர், த்ரமிடர், குஹதேவ ரென்கிற மூவரைப் பேரிட்டு ப்ரஸ்தாவித்து இவர்களை நம் தரிசனத்திற்கு ப்ரவர்த்தகர்களாகக் காட்டியுள்ளார்; "ஸஹஸ்ரோதிஷு ஸித்தேஷு வாக்யாநேஷு மஹாத்மபி:" என்ற ஸ்ரீபாஷ்யோபக்ரமஸூக்தியின் ச்ருதப்ரகாசிகையிலும் இஃதுள்ளது. ஆக, முதலாழ்வார்கள் மூவர், டங்கத்ரமிட குஹ தேவர் மூவர், * நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தமித்யாதிப்படியே ஸ்ரீமந் நாத யாமுந யதிவரர்கள் மூவர், ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் மூவர் என்னும்படி பல முநித்ரயங்கள் இருந்தும் இந்த ஸம்ப்ரதாயத்தை முநித்ரய ஸம்ப்ரதாய மென்று ஒரு பூர்வாசார்யரும் வ்யபதேசித்திருக்கவில்லை. புது வைஷ்ணவங்கொண்டாடத் தொடங்கினவர்கள் தங்களுடைய ஸம்பிரதாயம் புதிதாகத் தோன்றியதே யென்பதைக் காட்டிக்கொள்ளவே முநித்ரய ஸம்பிரதாய மென்று வ்யவஹரிக்கத் தொடங்கினர்கள். இது ஜுகுப்ஸநீயமென்பதைக் காலக்ரமேண தாங்களே தெரிந்துகொண்டு 'அதற்கு அப்படியர்த்த மன்று, இப்படியர்த்தம்' என்று மெழுகப்பார்ப்பது அசட்டுத்தனத்தையே ஆவிஷ்கரிப்பதாகும்.

— தேசிகதர்சந வ்யபதேசத்தின் அர்த்தமில்லாமை —

56. இது போலவே தேசிகதர்சந மென்றும் அதிஸமீப காலத்தில் வழங்கத் தலைப்பட்டார்கள். முப்பது வருஷங்களுக்கு முற்பட்ட ஒரு புத்தகத்திலாவது ஒரு பத்ரிகையிலாவது தேசிகதர்சந மென்கிற பதத்தை ஒருவர் காணமுடியுமா? இவர்கள் தாம் காட்டமுடியுமா? தேசிகதர்சந மென்பது பகவத்ராமாநுஜ தர்சநத்திற்காட்டிலும் வேறுபட்டதாக இருந்தாலொழியப் பிரித்து வ்யபதேசிக்க நியாயமில்லை. ஸ்ரீ லோகாசார்ய ஸ்ரீமத் வரவரமுநி பக்தர்களிற் காட்டில் தங்களுக்கு வ்யாவ்ருத்தி தோற்றவேணு மென்பதுதானே இவர்களுக்கு உத்தேச்யம்; தேசிக திவ்ய ஸூக்திரஸிகா: என்றோ தேசிக திவ்ய க்ரந்ததுரந்தரா: என்றோ இங்ஙனே பல பல பிருதாவளிகளைத் தாராளமாக வஹிக்கலாம். தேசிகனது திருக்குமாரர்க்குத் தனியனிட்டவர்களும் * ஸ்ரீமல்லக்ஷ்மணயோகீந்த்ரஸித்தாந்த விஜயத்வஜம் * என்றார்களே யல்லது இந்த நவீந பாஷையைப் புகுத்தி ஒருவர்க்கும் ஒரு தனியனுமிட்டார்களில்லை. இவர்கள் தேசிகதர்சந மென்று வழங்குவதில் நமக்கு அஸூயாலேசமுமில்லை. கலிவாஸநத்திலுங்கூட இவர்கள் தேசிகதர்சந ஸஞ்ஜ்ஞா: அஹமஸ்மி போ: என்று கூட்டிச் சொல்லிக் கொண்டாலும் நமக்கு அஸூயையில்லை. தேசிகதர்சநவாசத்தை யிட்டு பிருதாவளிகள் வஹிப்பவர்கள் "பகவத் ராமாநுஜ தர்சநத்தில் எதாவது சொல்லவேணும்" என்று அபேக்ஷிக்கப்பட்டால் சொல்ல வல்லவர்களே. ஆனல் அவர்களை நோக்கி "தேசிக தர்சனத்தில் எதேனும் ஸாதிக்கவேணும்" என்று அபேக்ஷித்தால் ஒன்றும் வாய்திறவார். இதைப் பரீக்ஷித்தும் பார்க்கலாம். ஆனாலும் சில பாமரர்களை வஞ்சிக்கவேண்டி நவீந ஸங்கேதஸித்தங்களான சில விஷயங்களைச் சொல்லி 'இதுதான் தேசிகதர்சந மஹார்த்தம்' என்று மழுப்பி விடுவர்கள். அவ்வர்த்தங்களுக்கும் தேசிக திவ்ய ஸூக்திகளுக்கும் ஸம்பந்தலேசமுமிராது. இது நாம் பாமரவஞ்சகமாகச் சொல்லுவதன்று, எழுதுவதன்று. கீர்த்திமூர்த்திகளான கபிஸ்தலம் ஸ்வாமி, கோஷ்டீபுரம் ஸ்வாமி முதலானர் இந்த நவீந குஸ்ருஷ்டிகளை ஆமோதித்திலர்கள். தேசிக ஸ்ரீஸூக்திகளில் உள்ளபடி ஆழ்ந்த உணர்ச்சி பெறாதவர்களே இக்காலத்தில் தேசிகதர்சந ப்ரவிஞ்ஞிவிருதுகளை வஹிக்கின்றார்கள். ப்ரபத்தி விஷயமோ, பிராட்டி விஷயமோ, வ்யாப்தி விஷயமோ; நிர்ஹேதுகக்ருபா விஷயமோ, எம்பெருமானுடைய நிரபேக்ஷோபாயத்வ விஷயமோ........ எதை யெடுத்துக் கொண்டாலும் தேசிக திவ்ய ஸூக்திகளுக்குப் பொருந்தாதவற்றையே பேசி 'இதுதான் தேசிகதர்சனம்'

என்று சொல்லி உலகை வஞ்சிக்குமவர்கள் தேசிகதர்சநம், தேசிகதர்சநம் என்று உருப் போட வேண்டியது மிக அவசியமே யாகும்.

## — தேசிகனோடு ஸம்பந்தம் கொண்டாடுவது என்று தொட்டு? —

57. ஆசார்யர்களிடத்தில் நமக்குள்ள பக்தி விசேஷத்தைக் காட்டவேண்டிய முறைகள் பலபல வுண்டு. ஒளசித்யத்தைக் கடந்து காட்டுவதனால் அசட்டுத்தன மொன்றுதான் பலிக்கும். இவ்வளவேயு மன்று; இவர்களுடைய உண்மை ஸ்வரூபமும் இதனால் நன்கு விளங்கி நிற்கும். அதாவது, தேசிக ஸம்பந்தத்தை அன்றுதொட்டுப் பெற்றவர்களன்றிக்கே இடைக்காலத்தில் இழுத்துப் போட்டுக்கொண்டவர்களென்பதே. திருவவதார ஸ்தலமுட்பட அவ்வோ திவ்ய தேசங்களிலே ஸேவை ஸாதித்தருளும் தேசிக திவ்யமங்கள விக்ரஹத்தை ஸம்ப்ரதாய பரம்பரையாய் வழிபடவும் அநுபவிக்கவும் பாக்யமில்லாதவர்கள் பாஹ்ய பூமிகளிலே தனிக்கோவில் கட்டிக் கோலாஹலங்கள் செய்ய என்றைக்கு ஆரம்பித்தார்களோ அன்றைக்குத்தான் இவர்கள் தேசிக ஸம்பந்தத்தை ஆக்ரமித்துக்கொண்டவர்கள்—என்பதில் யாருக்கேனும் விப்ரதிபத்தியுண்டாக ப்ரஸக்தியுண்டோ? இவ்விஷயங்களைப் பலபல நூல்களிலே நாம் ப்ரமாணயுக்தி புஷ்கலமாக நிரூபித்தே யிருக்கிறோம். அவற்றுக்கு அடிக்கடி ஸ்மாரணமும் ப்ரகடநமும் செய்து போரவேண்டிய ஆவச்யகதையையும் இவர்கள் ஒருவர் மாறி யொருவராக விளைத்துவருவது உலக நன்மைக்கே யாகும்.

## — D. T. தாதாசார்யரே யதார்த்த க்ராஹி —

58. திருவரங்கம் பெரிய கோயிலிலே ஸ்ரீரங்க நாச்சியார் திருமுன்பே ஸேவை ஸாதித்தருளும் தேசிகனை உள்ளடக்கி, மற்றையாழ்வாராசாரியர்களோடொக்க அவர் அநுபவிக்கவேண்டிய உத்ஸவாதிகளை யநுபவிக்கவொட்டாமல் தடை செய்து வெளி வீதிகளிலே தனிக் கோவில்கள் கட்டிக் கோலாஹலங்கள் செய்வது எதற்காக? திருவல்லிக்கேணி திருவிந்தளூர் ஸ்ரீகாஞ்சீ ஸ்ரீபெரும்பூதூர் முதலான விடங்களிலே தேசிகன் மற்றையாழ்வாராசாரியர்களோடொக்க அத்யயநோத்ஸவ அவதாரோத்ஸவாதிகளை ஸத்ஸம்ப்ரதாய ப்ரக்ரியையிலே அநுபவித்தருளாநிற்க அதை அஸஹமாநர்களாய் இவ்விடங்கள் தோறும் தனிக் கோவில்கள் கட்டித் தனியநுபவம் செய்வது எதற்காக? என்கிற இக்கேள்வி ஒருபுறமிருக்க, இக் கூத்துக்கள் எத்தனை நாளாக? என்பது முக்கியமான கேள்வி. 40, 50, 80 ஆண்டுகட்கு உட்பட்ட காலத்திலேயே இத் தாண்டவங்கள் தொடங்கினவென்பது மறுக்கவும் மறைக்கவும் முடியாதது. இவர்கள் தேசிகன் காலந் தொடங்கியே பரம்பரையாய் அநுவர்த்தித்துவரும் அநுபந்திகளாகில் இத்தகைய ஸம்பவங்களுக்கு அணுவளவும் அவகாசமுண்டாகியிருக்குமா என்கிற விதை—சற்று விமர்சிக்க இவர்கள் வகுப்பில் ஒருவருமில்லையா? விமர்ச குசலரான D. T. தாதாசாரியர் ஒருவர் மட்டும் உண்மையைக் கண்டறிந்து வெளியிட்டுவைத்தார் — "உடையவரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து நிர்ப்பந்தத்தினால் கோயிலை வசப்படுத்திக்கொண்டு புண்ட்ர விபர்யயத்தைச் செய்து வைத்தார்கள்" என்று. மஹாசக்தரான தேசிகன் அந்த விபர்யயத்தை மாற்றியிருக்கக்கூடாதா? என்று கேட்டால் மௌநம் ஸர்வார்த்த ஸாதகம் ॥

## — இடைக்காலத்துக் குஸ்ருஷ்டிகள் —

59. ப்ரக்ருத விஷயத்தை நிகமிக்கிறோம்; இவர்கள் தேசிகனைப் பரம்பரையாக வழிபடுகிறவர்களல்லாமையாலே தேசிகனுடைய பெருமைகளை இவர்கள் உள்ளபடி

றியப் பெற்றவர்களல்லர். தப்பும் தவறுமான சரித்திரங்களை அவரவர்கள் மனம் போனபடி ஏடுக்கத் தொடங்கினர்க ளிடைக்காலத்தில். தேசிகனுக்குப் பெருமையை விளைப்பதாக எண்ணி இவர்கள் செய்து போருமவையும் எழுதிப் போருமவையும் நேர்விபரீதமான வினையே விளைவிப்பன வென்பதில் ஐயமில்லை. ஸகல திவ்யதேசத்தெம்பெருமான்களும் ஸகல ஆழ்வாராசாரியர்களும் நிராபாயமாகக் கேட்டருளும் தனியனையும் வாழி திருநாமங்களையும் விட்டுச் சில நூதந ஸ்ருஷ்டிகளைப் பண்ணி நூதநஸ்தலங்களிலே நூதனமாகக் கோஷிப்பதனுல் என்னுகு மென்பதைத் தெரிந்துகொள்ள சக்தியிலாதவர்களோ இவர்கள்? * ஸுஜநாஸ்வீக்ருத பூதஸம் பஹுவிதாஸவி ஸம்பவதி ஹ்யர்த: * என்ருளவந்தாரருளிச் செய்ததற்கு இவர்களுமிலக்கே.

## — லோகாசார்யாதி ஸச்சிஷ்யேத்யாதி விமர்சம். —

60. * லோகாசார்யாதிஸச்சிஷ்யார்ப்பித ஶாரீரபாஷ்யக: * என்கிற நாமத்திலிருந்து ப்ரஸக்தாநு ப்ரஸக்தமாக இத்தனை யெழுத நேர்ந்தது. இதில் இன்னமும் சில கேளீர். * ஶபரீபூஜித ஹ்ருத்யபலோ ராம: * குசேலோபஹ்ருத யாநாபத்ருத: க்ருஷ்ண: * என்றிங்கனே சில வாக்யங்களை நெஞ்சிலிட்டுப் பாருங்கள். சபரியினுல் அளிக்கப்பட்ட பலங்களையுடையவன் ஸ்ரீராமன்; குசேல முனிவனுலளிக்கப்பட்ட அவலையுடையவன் ஸ்ரீக்ருஷ்ணன் என்றிங்ஙனே பொருளாகுமே யொழிய, சபரியின் பொருட்டு அளிக்கப்பட்ட என்றே, குசேல முனிவன் பொருட்டு அளிக்கப்பட்ட என்றே பொருளாக மாட்டாதென்பதை ஸாதாரணமாக அனைவருமறிவர். இப்படி நூற்றுக் கணக்கான உதாஹரணங்கள் காட்டலாம். இது போல 'லோகாசார்யாதி ஸச்சிஷ்யார்ப்பித ஸ்ரீபாஷ்ய: தேசிக:' என்கிற வாக்கியம் — ஸ்ரீலோகாசார்யாதிகளின் ஸச்சிஷ்யர்களாலே உபதேசிக்கப்பட்ட ஸ்ரீபாஷ்யத்தையுடையவர் தேசிகன் என்று பொருள்படுமேயல்லது வேறுவிதமாகப் பொருள்படமாட்டாதென்பதும் நிர்விவாதம். * வாதிஹம்ஸாம்புவாஹார்ய ஸச்சிஷ்யார்ப்பித ஸகலார்த்த தேசிக: * என்றால், நடாதூரம்மாளுடைய ஸச்சிஷ்யராலே [கிடாம்பி யப்புள்ளாராலே] உபதேசிக்கப்பட்ட ஸகலார்த்தங்களையு முடையவர் தேசிகன் என்றல்லது வேறுவிதமாகப் பொருள்படுமா? அம்மாளுடைய ஸச்சிஷ்யர்க்கு ஸகலார்த்தங்களையு மளித்தவர் தேசிகன் என்பதாக இங்குப் பொருள்படுமாகில் * ஸ்ரீலோகாசார்யேத்யாதிக்கும் இவர்கள் கொள்ளுகிற பொருள் பொருந்தும். கீழே *ரங்காஸ்தாநே........வித்வத் ஸேவாவிமலமநஸா வேங்கடேசேந* என்கிற தேசிக திவ்யஸூக்தியைக் கொண்டு நாம் உபபாதித்தபடி ஸ்ரீ லோகாசார்ய சிஷ்யர்களும் பெரியவாச்சான்பிள்ளை சிஷ்யர்களும் அழகியமணவாளப் பெருமாள் நாயனர் சிஷ்யர்களுமான பல வித்வான்களை ஸேவித்து தேசிகன் தெளிவுபெற்றது ஸ்ரீ பாஷ்யத்தில் — என்று காட்டுகிறது இங்குள்ள அபிப்ராயம். இங்ஙனன்றிக்கே ஸ்ரீ லோகாசார்யர்க்கு ஸ்ரீபாஷ்ய முரைத்தவரென்று இந்த வக்தாவுக்கு விவக்ஷிதமாகில் *ஸ்ரீலோகாசார்யஸச்சிஷ்ய ஸ்ரீபாஷ்ய ப்ரவசந தேசிக: * என்றே * ஸ்ரீ லோக தேசிகாதிஸ்த: ஸ்ரீ பாஷ்யோபதேசக: * என்றே மிக வெளிதாக எழுதியிருக்கலாமே.

## — இதற்கு அழுவதா சிரிப்பதா? —

61. அன்றியும், * சாரீரபாஷ்யக: * என்றதும் அஸம்பத்தம். சாரீரக பாஷ்ய மென்று வ்யபதேசமே யொழிய சாரீர பாஷ்ய மென்று வ்யபதேசம் கிடையாது. சாரீரக மென்பதில் ககாரம் ஸ்வார்த்தகப்ரத்யய மென்று இவருடைய மருள். ஶாரீரம் காய இதி ஶாரீரக மென்று முன்னேர்களால் எழுதப்பட்டுள்ளது. தைஹிக–ஶைவ என்று

யாதுவும் காட்டியுள்ளார்கள். ஈதொன்று மறியாத வொரு மூடர் இதை யெழுதிவைத்தா ரென்று நிர்ணயிக்கத் தட்டுண்டோ? ஒரு பண்டிதர் சொன்னார்— பாஷ்யத்தி லுள்ள ககாரத்தை யெடுத்து சாரீர மென்பதோடு கூட்டி 'சாரீரக பாஷ்ய:' என்றவிடத்தி மென்று. வ்யாஸஸூத்ர ஸம்பந்த பாஷ்யம் என்று விவக்ஷித்து வ்யாஸ ஸூத்ர ஸம்பந்த பாஷ்யம் என்றாரா மொருவர்; அவருடைய மாணாக்கர்கள் போதுமிவர்கள். * ஸம்ஸித சாரீரகம் * என்றார் வ்ருத்திகாரர். சாரீரகமீமாம்ஸா பாஷ்ய மென்று பலகாலு மருளியுள்ளார் பகவத் பாஷ்யகாரர். * த்ராவித சாரீரக பாஷ்ய: * என்கிறார் தேசிகன். இவை யொன்றையு மறியாத வொருவர் ஸந்ந்யாஸிகள் மூவர்க்கு ஸகலார்த்தங் களும் ஸாதித்தாரென்றால் இதற்கு அழுவதா சிரிப்பதா?

## — எண்பதிநாயிரப்படி மூளைத்த அதிசயம். —

62. இனி அடுத்த விஷயத்திற் சொல்வோம். (775) * க்ருதாசீதிஸஹஸ்ர த்ரமிட உபநிஷத் * என்கிற ஆச்சரியமான வொரு திருநாமத்தைக் காண்மின். இதில் க்ருதாசீதி ஸஹஸ்ர—என்றும் த்ரமிடோபநிஷத் என்றுமுள்ள விந்யாஸத்தைக் கேட்கும்போதே செவிக்கு எவ்வளவு இனிதாயிருக்கிற தென்பது சொல்லவேணுமோ? இந்த பரம்பரையில் ஆசார்யர்க்கும் சிஷ்யர்க்கும் வடமொழி தென்மொழிகளிலுள்ள விலக்ஷணமான மேதை லோகாதீதமானது. ப்ராக்ருத ஸஹஸ்ரநாம கர்த்தாவாகச் சொல்லப்படுகிறவருடைய ஆசார்யர் திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானம் செய்திருக்கிறார்; அதில் (8—8—6) * நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந்திரிய மெல்லாமீர்த்து * என்றவிடத்திலே இந்த்ரியம் என்கிற வடசொல் தென்மொழியில் ஈந்திரிய மென்று ஆய்விடும் என்று விலக்கணமான இலக்கண மெழுதி வைத்தார். அவருடைய சிஷ்யரான இவர் பரிமள மென்பது பரீமளமாய்விடும், அதிகரண மென்பது அதிகரணமாய் விடும், அபிகமந மென்பது அபீகமநமாய்விடும்....... என்று பல பலவும் பரிஷ்கரித்து விட்டார். இவர்கள் நாநாசாஸ்த்ர ஸாகரங்களில் ஆழ மூழ்கினவர்களாம். இவர்களைத் தெய்வமாகக் கொண்டாடுகிற நவீநர்கள் தங்கள் திரளிலே ஸதாசார்ய திவ்ய ஸூக்திகளைப் பரிஹஸிப்பதோ அபரிமிதம். அது கிடக்கட்டும் * க்ருதாசீதி ஸஹஸ்ர—த்ரமிடாகமபரீமள: * என்கிறாரே இதற்கு என்ன அர்த்தம். தென்னவிராமன் 'பூர்வ பூர்வம்' என்பனும்; இதற்கு பூசுண்ணிக்காய் தனிகை பண்ணு என்று அர்த்தமாம். பூர்வ பூர்வ என்பதற்கு பூர்வபூர்வ என்று ஆதேசமாம், * பூர்வேபூர்வ: * என்று இதற்கு ஸூத்ரமாம். இதை ஸ்ரீமத் பரமஹம்ஸ ஆச்சாரண்டவன் ஸாதிக்கக் கேட்கும்போது வெகு ஆனந்தமாயிருக்கும். வயிறு வெடித்துச் சாவர்கள் சிஷ்ய கோடிகள். அந்த ஸ்வாமி இப்போதெழுந்தருளியிருந்து இந்த ஸஹஸ்ரநாம ஸ்துதியை ப்ரவசநம் செய்தருள நேர்ந்தால் * ப்ரதிபதமபி வ்யாக்யாதி ... ஸ்திதி: (அ) உஜ்ஜ்ரும்பிதோ ... கோலாஹலம் * என்னும்படியான ஹாஸ்ய கோலாஹலங்கில்லோலமே யாகும்.

## — அர்த்த மில்லாத அசட்டு வார்த்தை. —

63. இது கிடக்க; விஷயத்தில் செல்வோம்; அசீதி ஸஹஸ்ர மென்கிறது இங்கு. இதற்கு எண்பதினாயிரமென்று பொருள். எண்பதினாயிரம் த்ரமிடாகம பரீமளம் தேசிகன் ஸாதித்ததாக இதற்கு அர்த்தமாம். ஒருவர் * ஜோடூஸாவஹ்நிதோ ... * என்றொரு ச்லோக மெழுதியனுப்பினாராம். இதன் அர்த்தம் ஒருவர்க்கும் புரியவில்லையாம். கடைசியாக ஒரு பெரிய வித்வான் இதன் பொருளைக் கண்டு பிடித்துச்

சொன்னாராம். 'மொட்டை ஸாத்தானி குட்டையில் விழுந்தான்' என்று இதற்கு அர்த்தமாம். முதல் பாதத்தில் முடிவிலிருக்கிற (தாநி) என்பதை (மொட்டஸா) என்பதோடு கூட்டவேணுமாம்; கூட்டினால் 'மொட்டஸாதாநி' என்றாகிறதன்றோ. குட்டையில் என்பதற்கு பல்வலே என்கிற பதமிருக்கிறது. பிறகு (வதநம் அகார) என்பது (வதகார அநம்) என்றிருக்கிறது. (ஹவை) என்பது பாதபூரணம். நிர்வேஷ ஸசகமுமாம். இதைக் கண்டு பிடித்து உரைத்தவர்க்கும் மூலகாரர்க்கும் விசேஷஸன்மானங்கள் செய்தார்களாம். ப்ரக்ருதம் மூலகாரர்க்கு முகவுரைகாரர் தம்முடைய அதிசயோக்திகளினாலேயே விசேஷ ஸன்மானம் செய்திருக்கிறார். இந்த நாமாவளிக்கு ஒருவர் வியாக்கியான மியற்றி வெளியிட்டால் அவர்க்கு விசேஷ ஸன்மானமளிக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம். இந்த பாக்யம் நமக்கு வாய்க்குமோ வாய்க்காதோ ?

## — நிகமபரிமளத்தின் பரிமள ப்ரவாஹம். —

64. இது நிற்க; விஷயத்தை விமர்சிப்போம். எண்பதினாயிரப்படி யென்கிற நிகம பரிமளத்தை தேசிகன் ஸாதித்தாரென்பது இங்கு வக்தாவுக்கு விவக்ஷிதம். ஸுப்ரஸித்தமான எழுபத்தாறாயிரப்படிக்கு ப்ரதியாக [அதில் இரட்டிப்பான] எழுபத்தீராயிரப்படி தேசிகன் ஸாதித்தார் என்று நவீனர்கள் முதன் முதலாக எழுதினார்கள். அதைத்தழுவி * த்விஸப்ததி ஸஹஸ்ரம் நிகமவாஸ்ரயம் அர்கரோத் * என்று ஒருவர் ச்லோகமியற்றினார். அதை வேறொருவர் கண்டித்து "எழுபத்தீராயிரப்படியல்ல, எழுபத்து நாலாயிரப்படி; தேசிகனே * சதுஸ்ஸப்ததி ஸாஹஸ்ரநாம வாதாய ஸம்வஸ்யா । வேங்கடேசோ நாதஸிதோ ஜீயாத் ஸ்வரீஜு: * என்று ஸாதித்திருக்கிறாரே யென்று ப்ரமாணமும் காட்டிப் பிளந்துகட்டினார். இப்போது அவையிரண்டுபடியும் தொலைந்து எண்பதினாயிரப்படி வந்துவிட்டது. க்ரமேண எத்தனையாயிரம் பெருகுமோ தெரியவில்லை. பரிமலம் பரிமலமாகப் பெருகினபோது க்ரமும் பெருகவேண்டியதுதானே. இந்த நாமாவளிகாரரை அபரதேசிகனைப் புகழ்கிற முகவுரை காரரோ வென்னில்; (பக்கம் 12ல்) எழுதுகிறார்-- "ஆழ்வார் நியமனத்தின்பேரில் ஆறாயிரப்படிக்கு வியாக்கியானமான நிகமபரிமள மென்ற எழுபத்தி நாலாயிரப்படி வியாக்யானமும் செய்தருளினார்" என்று. இவர் கொண்டாடும்அபரதேசிகன் அசீதிஸஹஸ்ர மென்கிறார்; அசீதி யென்றால் **74** என்று இவர் உரையிடுகிறார். இளங்காடு யதிகள் ஒரு கதை சொல்லுவதுண்டு; ஒருவர் ஸ்ரீராமாயண மூலம் வாசிக்கிறார், மற்றொருவர் கதை சொல்லுகிறார். இவர் வாலிவதத்தைப்பற்றி தடபுடலாகக் கதை சொல்லிப் போகிறார். மூலம் வாசிப்பவர் ஒரு ஸர்க்கம முடிந்தவுடனே "இதி ஆதிகாவ்யே ஸ்ரீராமாயணே யுத்தகாண்டே அஷ்டமஸ் ஸர்க்க:" என்று வாசித்தாராம். அதைக்கேட்ட ச்ரோதாக்கள் யுத்தகாண்டத்தில் வாலிவத மேது? என்றார்கள். அதனால் வாலிவத கதை யுத்தகாண்டத்தில் கிடையாது போலுமென் றெண்ணிய அந்த பௌராணிகர் 'அடபாவி! நீ அயோத்யாகாண்டம் வாசிக்கிற யென்று நினைத்தன்றோ நான் வாலிவதம் சொல்லி வருகிறேன்; யுத்தகாண்டம் வாசிக்கிறேனென்று முன்னமே நீ தெரிவித்திருந்தால் கரதூஷணவதத்தை ஆச்சரியமாகச் சொல்லியிருப்பேனே' என்றாராம். அந்த கதையெல்லாம் இவர்களுக்கேயன்றோபொருந்துகிறது.

## —— வாஜவஷ ஹாஒ விநோதம். ——

65. மூலகாரர்க்கு முகவுரைகாரர் தோற்றவரல்லர். ஒன்று கேளீர். 35 ஸம்வத்ஸரங்களுக்கு முன்பொருகால் கோயிலுக்கு விடை கொண்டிருந்தேன். அப்போது ஸ்ரீமத்

தேரழுந்தூராண்டவன் ஸன்னிதியில் ரஹஸ்ய காலக்ஷேபங்கேட்டுச் சிலர் புஸ்தக ஹஸ்தர்களாய் வந்துகொண்டிருந்தார்கள்; அவர்களை நோக்கிக் கையிலுள்ள புத்தகம் யாது! என்று கேட்டேன்; 'ஆண்டவன் பரமபத பங்கம் காலக்ஷேபம் ஸாய்த்தாகிறது; அதுதானிது' என்றார்கள். என்ன புஸ்தகம்? என்று மறுபடியும் கேட்டேன்; பரமபத பங்கம் என்று உரத்துச்சொன்னார்கள். இது யார் ஸாதித்தது? என்றேன். "என்ன? தேவரீர் கூட இப்படி கேட்கிறதே; இது தேசிகன் ஸாதித்ததென்று தேவரீருக்குத் தெரியாதா?" என்றார்கள். தேசிகன் பரமபதத்தை எதற்காக பங்கம்பண்ணுகிறார் என்று கேட்டேன்; * வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ: * என்று ஸாதித்தவர் தேசிகனன்றோ. என்றார்........ இப்படிநானெழுதுவதை நீங்கள் மெய் யென்று நினைக்கமாட்டீர்கள். ப்ரக்ருத முகவுரையில் பக்கம் 19ல் வரி 6ல் " பரம பத நிரஸநத்தில் ஆழ்ந்த புத்தி கூர்மை இந்த ஸஹஸ்ரநாமஸ்துதியினால் ஏற்படுவதாக" எழுதப்பட்டுள்ளது. முதல் வரியில் கரமசரோதவர்ஜனம் என்று நன்று காட்டப்பட்டிருக்கின்றது. அது இன்னதென்றே நமக்கு விளங்கவில்லை. பரமபத நிரஸந மென்றதைப் பார்த்தவுடனே பரமபத பங்க ஐதிஹ்யம் நினைவுக்கு வந்தது. இந்த முகவுரைகாரர் அப்படி மருளக் கூடியவரல்லர். பகரம் அச்சுப்பிழையாக விழுந்திருக்குமோ?.

## — நிகமபரிமளத்தின் நித்யகல்யாணம் —

66. தேசிகன் திருவாய்மொழிக்கு விரிவான வியாக்கியானமாக நிகமபரிமளமென்றொரு க்ரந்தமிட்டிருந்தாரென்றும், அது அவரால் ஸ்வசிஷ்யர்களுக்கு ப்ரவசனமும் செய்யப்பட்டிருந்ததென்றும், ஆனால் அது நம்முடைய தௌர்ப்பாக்கியத்தினால் இப்போது கிடைக்க வழியில்லாமல் லுப்தமாய்விட்டதென்றும் கூறிக் கண்ணீர் சோர்கிறார்கள். அன்னவர்களில் இந்த முகவுரைகாரரு மொருவரே. அந்த வியாக்கியானம் எவ்வளவோ அழகென்கிறார்கள். அதை இவர்கள் நேரில் கண்டவர்கள்போல ஆறாயிரப்படிக்குப் பின் தோன்றிய வியாக்கியானங்களுக்கெல்லாம் கண்டனமாயிருந்ததென்று மெழுதுகிறார்கள். தேசிகனுக்கு விபுலவியாக்கியான மெழுதத் தெரியாதென்று யாரும் சொல்லவில்லார். திருவாய்மொழி விஷயத்தில் தாத்பர்ய ரத்நாவளியும் ஸாரமும் அருளிச்செய்து க்ருதக்ருத்யரானார் என்னுமிவ்வளவே உண்மை. ஒருகால் நிகம பரிமளமருளிச் செய்திருந்தால் அது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமாகிற ஸ்ரீ பாஷ்யத்திற்கு ச்ருதப்ரகாசிகை போன்றிருக்குமேயொழிய வேறுவிதமாக இருக்க ப்ரஸக்தியே கிடையாது. கண்டனமாயிருந்தால் ஆறாயிரப்படிக்கும் கண்டனமாகவேயிருக்கும். அமலனாதி பிரானுக்கு தேசிகனருளிச்செய்த வியாக்கியானம் முநிவாஹந போகமென்னும் பெயரால் ரஹஸ்யங்களுள் ஒன்றாக விளங்கி வருகின்றது. இதில் பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளத்தை நன்கு ஸ்தாபிக்க வல்ல ஸ்ரீ ஸூக்திகளையே அருளியுள்ளார். இதற்காக இங்கு இரண்டு விஷய மெடுத்துக் காட்டுகிறேன். (1) அவதாரிகை ஆரம்பிக்கும்போதே "காரணவிசேஷம் இன்னதென்று அறுதியிட அரிதாயிருப்பதொரு பகவத் கடாக்ஷத்தாலே" என்கிறார். இதனால் பகவத் க்ருபை நிர்ஹேதுகமே யொழிய ஸஹேதுகமன்று என்கிற ஸதாசார்ய ஸித்தாந்தமே நிலை நிறுத்தப்பட்டது. (2) 'அமலன்' என்பதற்கு மோக்ஷப்ரதன் என்று அர்த்தம செய்தருளி, மேலே ஆதி என்பதற்கு ஜகத்காரண பூதனென்று பொருள் செய்து, உடனே "இக்காரணத்வமும மோக்ஷப்ரதத்வமும் சத்ரசாமரங்கள் போலே ஸர்வலோகசரண்யனுக்கு விசேஷ சிஹ்னங்கள்" என்றார். இதனால் ஜகத்காரணத்வ மோக்ஷப்ரதத்வங்கள் பிராட்டிக்குமுண்டென்கிற நவீனர்களின் வாதம் இடமறும்படி ஸத்ஸம்ப்ரதாய ஸித்தாந்தம் நிலைநிறுத்தப்பட்டது. கிம்பஹுநா? நிகமபரிமள மென்பது மஹநாரவிந்த பரிமளமே.

ஸ்ரீ தேசிக ஸஹஸ்ரநாம விமர்சத்தில் முதல் ஆஹ்நிகம் முற்றிற்று. [தொடரும்]

---

Rgd. No. 2975 

கிடைக்குமிடங்கள்:—

(1) **க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.**

(2) கராலபாடி ராதாகிருஷ்ணய்யா,
229, கோவிந்தப்ப நாயகன் தெரு, மதராஸ்—1.

(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்ரிபேட்டை, மதராஸ்—2

(இவர் சென்னையில் ப்ரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

P. B. ANNANGARACHARYA,
L. KANCHEEPURAM.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswar Press,
Sannidhi Street, Chinna Kancheepuram.